# ஜகத்குரு
# ஸ்ரீ ஜயேந்திரர் பதில்கள்

[ ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதீசுவர ஜகத்குரு
ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகள்
அவர்களின் பதில்கள் ]

தொகுப்பு
'மங்கை' உதவி ஆசிரியர்
ஏ. சுவாமிநாதன்




அல்லயன்ஸ் கம்பெனி
244, ராமகிருஷ்ணா மடம் சாலை
தபாற் பெட்டி எண் 617
மயிலாப்பூர் : : சென்னை-600 004

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| 1. | Title of the Book | : Jagathguru Sri Jayendirarin Bathilgal |
| 2. | Compiled by | : A. Swaminathan |
| 3. | Language | : Tamil |
| 4. | Edition | : First Edition |
| 5. | Date of Publication | : July 1989 |
| 6. | Copy Right Holder | : Publisher |
| 7. | Paper used | : 10.9kg. D/Cr. White Printing |
| 8. | Size of the Book | : 18.5 cms × 12.5 cms |
| 9. | Printing point used | : 11 point |
| 10. | Number of pages | : 144 Pages |
| 11. | Number of Copies | : 1,100 Copies |
| 12. | Artist | : Seeni Somu |
| 13. | Printer | : Moovendhar Achagam Madras-600 014 |
| 14. | Binding | : Card Board Binding |
| 15. | Price | : Rs. 11-00 |
| 16. | Publisher (with full address) | : The Alliance Company 244, R. K. Mutt Road Post Box No. 617 Mylapore, Madras-600 004 Phone : 7 1 3 1 4 |
| 17. | Subject | : Replies given by His Holiness Kanchi Kamakoti Peetam Shri Jayendra Saraswathi Swamigal |

# முன்னுரை

உலகை உய்விக்கும் மகாபுருஷர்கள் அவதரித்துக் கொண்டிருப்பார்கள் அந்தந்தக் கால கட்டத்தில். 'தர்மத்தை நிலை நிறுத்த யுகங்கள்தோறும் தோன்றுவேன்' என்கிறார் கிருஷ்ணர் கீதையில்.

இன்று—நம்மிடையே நடமாடும் கடவுளாக இருந்து, அருளாசியளித்து வழி காட்டுபவர் வணக்கத்துக்குரிய ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சங்கராசார்ய சுவாமிகள் அவர்கள். ஜகத்குருவான ஸ்ரீ பெரியவர்களின் வாரிசாக இருப்பவர் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள். இந்து மதத்தின் உயர்வைப் பாரத நாடெங்கும் வீரமுழக்கம் செய்து வருகிறார்கள்.

ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் 1979ல் சென்னைக்கு எழுந்தருளியிருந்த போது தரிசிக்கச் சென்றோம். பெண்கள் சில சந்தேகங்களை 'மங்கை'க்குக் கடிதமாக எழுதிப் பதில் கேட்டிருந்தனர். அவற்றைச் சுவாமிகளின் சந்நிதானத்தில் தெரிவித்தோம்.

''சந்தேகக் கடிதங்களை அனுப்பி வையுங்கள், பதிலளிக்கிறேன்'' என்று முகம் மலர்ந்த சிரிப்புடன் தெரிவித்தார்கள். 'மங்கை'யில் ஒரே இதழில் பதில்கள் வெளி வந்த போது, கேள்விகள் மேலும் வரத் தொடங்கி விட்டன.

ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளிடம் சென்று 'கேள்விகளை நூலாக்க வேண்டும் என்று மயிலாப்பூர் அல்லயன்ஸ் நிறுவனம் விருப்பம் தெரிவித்து இருக்கிறார்கள்' என்றேன். ''ஆகா! அவர்கள் பல வருஷங்களாக உபயோகமான புத்தகங்கள் போட்டிருக்கிறார்கள். உன்னிடம் இருக்கும் பழைய 'மங்கை'களையும் தேடிக் கொடு...'' என்று ஆசியுடன் அனுமதியும் வழங்கினார்கள்.

இந்தப் பதில்களை நூல் வடிவாக வெளியிட எமக்கு அனுமதி தந்த 'மங்கை' இதழின் பிரசுரகர்த்தர் திரு. வி. விசுவநாத ரெட்டி அவர்களுக்கும், இந்நூல் வெளிவரக் காரணமான நூற்றாண்டை நோக்கி வெற்றி நடை போடும் அல்லயன்ஸ் கம்பெனியின் அதிபர் ஸ்ரீ மணி அவர்களுக்கும் அவரது குமாரர் ஸ்ரீ ஸ்ரீனிவாசன் அவர்களுக்கும் எனது உளமார்ந்த நன்றி.

ஏ. சுவாமிநாதன்

## நூற்றாண்டை நோக்கி......

''தமிழில் நல்ல நூல்களை வெளியிட்டு வரும் அல்லயன்ஸ் ஸ்தாபகர் ஸ்ரீ. வி. குப்புசாமி ஐயரை நான் பாராட்டுகின்றேன்.''

—மகாத்மா காந்தி

''நீதிகளைக் கற்பிக்கும் சிறு கதைகளையும், பல நாடகங்களையும், பல மொழிபெயர்ப்புகளையும், இன்னும் பல விஷயங்களையும் எளிய அழகிய நடையில் வெளியிட்டு வரும் அல்லயன்ஸாரை நான் பாராட்டுகிறேன்.''

— மஹாமஹோபாத்தியாய
டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர்

''Books published by Alliance Company are highly Popular Books.''

—Rt. Hon'ble V. S. Srinivasa Sastri

''தமிழில் அழகிய புத்தகங்களை வெளியிட்டு வரும் அல்லயன்ஸாருக்கு நன்றி செலுத்தி அவர்களைத் தமிழ் மக்கள் ஆதரிக்க வேண்டுகிறேன்.''

—சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

''அல்லயன்ஸ் கம்பெனியார் நல்ல நூல்களை வெளியிடுவதில் தேர்ந்தவர்கள். அவர்களுக்குத் தமிழ் நாட்டார் தக்க ஊக்கம் தரவேண்டும் என விரும்புகிறேன்.''

—சத்தியமூர்த்தி

''மயிலை அல்லயன்ஸ் கம்பெனியாரின் வெளியீட்டுத் திறத்தை ஈண்டு விரித்துக் கூற வேண்டியதில்லை. அதை நாடறியும். அல்லயன்ஸ் கம்பெனியாரால் வெளியிடப் பெற்ற நூல்கள் யாவும் தமிழ்நாட்டுக்குப் பலவழிகளிலும் பயன் விளைத்து வருவது கண்கூடு. நாட்டு நலங்கருதி ஒழுங்கு முறையில் உழைக்கும் அவர்களுக்கு நாடு கடமைப் படுவதாக.''

—திரு. வி. க.

ஜகத்குரு ஸ்ரீ பரமாச்சார்ய சுவாமிகள் அவர்கள்
தம்முடைய பிரதம சிஷ்யர் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி
ஸ்வாமிகளுக்கு ஆசிரம உபதேசம் அளித்தது.

# பீட ஆரோஹண வைபவத்தின் தொகுப்பு

தமக்குப் பிறகு பீடத்தை அலங்கரிக்கத் தக்கதொரு மகானை நியமனஞ் செய்து அவருக்குத் தர வேண்டிய பயிற்சிகளையெல்லாம் தாமே கொடுக்க வேண்டுமென்று ஸ்வாமிகள் பல வருஷங்களாக விருப்பம் கொண்டிருந்தார் கள். இந்த விருப்பத்தைப் பூர்த்தி செய்யக்கூடிய ஒரு சிஷ்யரைச் சில வருடங்களாகவே தம் மனத்திற்குள் அவர்கள் தேர்ந்தெடுத்து, பின்னர் அவருடைய பெற்றோர் களின் சம்மதத்தையும் பெற்றிருந்தார்கள். தஞ்சை மாவட்டம் மன்னார்குடி வட்டத்தைச் சேர்ந்தவரும், தென் ரெயில்வேயில் திருச்சியில் உத்தியோகம் பார்த்த வருமான ஸ்ரீ மஹாதேவ ஐயர் என்பவரின் தவப் புதல்வரான ஸ்ரீ சுப்ரமண்யம் என்னும் சிறுவரே இந்தச் சிஷ்யராவர். சுமார் பத்தொன்பது பிராயம் நிறைந்த அவர் ஸ்ரீ மடத்திலேயே இளமைப் பருவம் முதல், வேதம் கற்று, நல்ல சீலமும், நற்குணமும் பெற்று விளங்கி வந்தார்.

இந்தப் பாலகருக்கு சந்யாச ஆச்ரமும், உபதேசமும் தந்தருளும் வைதிகக் காரியங்கள் 1954-ஆம் வருஷம் மார்ச் மாதம் 19-ஆம் தேதி முதல் தொடங்கி 22-ஆம் தேதி வரை

காஞ்சிபுரத்தில் நடைபெற்றன. ஸ்ரீ மடத்தின் சரித்திரத்தி லேயே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த இந்த விழாவைக் காண, பதினாயிரக்கணக்கில் பக்தர்கள் அங்கு கூடியிருந் தனர். இந்த வைபவங்கள் நடைபெறுவதற்குப் பூர்வாங்க மாக, ஸ்வாமிகள் கலவை என்னும் தலத்திலுள்ள தம் குரு, பரமகுரு இவர்களின் அதிஷ்டானங்களையும், காஞ்சிக்கு அடுத்த அம்பிகர்புரம் (அம்பி) என்னும் ஊரிலமைந்த பூர்வாசாரியரொருவரது அதிஷ்டானத்தையும் தரிசித்துக் கொண்டார்கள். மார்ச் மாதம் 22-ஆம் தேதி அதிகாலை யில், ஸ்வாமிகள் அனந்தசாகரம் என்னும் புனித தடா கத்தின் கரையிலுள்ள புராதன அச்வத்த மரத்தின் அடியிலிருந்து புனித மண்ணைப் பிரசாதமாகக் கிரஹித்துக் கொண்டு, பிறகு மடத்திலுள்ள ஸ்ரீ சுரேச்வராசாரியாரது பிம்பத்திற்குப் பூஜை செய்தார்கள். பின்னர் ஸ்ரீ காமாக்ஷி அம்பிகை சந்நிதி, அங்குள்ள ஸ்ரீ ஆதிசங்கரரது சந்நிதி இவற்றையும், குமரகோட்டத்தையும், ஏகாம்பரநாதர் ஆலயத்திலுள்ள ஆம்ர (மாமரம்) விருக்ஷத்தையும் தரிசித் துக் கொண்டார்கள். பின்னர் மடத்தின் அதிஷ்டான தெய்வமான ஸ்ரீ திரிபுரசுந்தரீ ஸமேத ஸ்ரீ சந்திர மௌலீஸ்வரரையும் பிரார்த்தனை செய்து கொண் டார்கள்.

உபதேசம் பெறும் சீடர் வேத விதிப்படி தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள், இவர்களுக்குச் செய்ய வேண்டிய கிரியைகளையெல்லாம் செய்து முடித்து, பின்னர் அந்நாளுக்கு முதல் இரவு முழுவதும் தூங்காத நிலை மையில் உட்கார்ந்தவாறே தியானத்தில் அமர்ந்திருந்தார். மறுநாள் அதிகாலையில் ஸர்வதீர்த்தக் கரையிலுள்ள முக்தி மண்டபத்தை அவர் அடைந்து, பூர்வாங்கமான வைதிகக் காரியங்களை முடித்துக் கொண்டு, குருநாதரது வரவை எதிர்பார்த்த வண்ணமாக இருந்தார்.

காலை சுமார் 9 மணிக்கு, ஸ்வாமிகள் ஸ்ரீ மடத்தி லிருந்து புறப்பட்டுப் பக்தர் குழாத்துடன் எட்டு தண்டி

ந்நியாசிகள் பின்தொடர, முக்தி மண்டபத்தை அடைந்தார்கள். அப்பொழுது குளத்தின் நான்கு கரைகளிலும், அதை அடுத்த வீதிகளிலும் ஸ்வாமிகளையும், சீடரையும் தரிசிக்க ஏராளமான மக்கள் கூடியிருந்தார்கள். சுமார் பத்து மணிக்குப் பிரதம சிஷ்யரான ஸ்ரீஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகள் வேத விற்பன்னர்களும், சாஸ்திர விற்பன்னர்களும் தொடர்ந்துவர ஸர்வ தீர்த்த தடாகத்தில் இறங்கி, இடுப்பளவு தண்ணீரில் நின்று, உலக பாசம் முழுவதையும் களைந்தார்கள். ஸ்வாமிகள் ஸ்ரீ விசுவேச்வரர் சந்நிதியில் தம் சிஷ்யருக்கு மஹாவாக்யத்தை உபதேசித்தருளினார்கள். அப்போதே அவர்கள் தம் சிஷ்யருக்குக் காஷாய வஸ்திரத்தையும் அளித்தார்கள்.

இந்த வைபவங்கள் முடிவு பெற்றவுடன் சிஷ்யர் பின் தொடர நடந்தவாறே மடத்தின் எல்லா விருதுகளுடனும், பெரிய காஞ்சிபுரம் கங்கை கொண்டான் மண்டபத்துக் கெதிரிலுள்ள ஸ்ரீ மடத்திற்குப் பகல் 12 மணிக்கு வந்தார்கள். ஸ்வாமிகள் ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் சந்நிதியை அடைந்ததும், தம் சிஷ்யருக்கு ருத்ராக்ஷ மாலையும் ஓர் ஸ்படிக மாலையும், திருப்பதி தேவஸ்தானத்தில் தமக்கு மரியாதையாக அளித்த பீதாம்பரம் ஒன்றையும் அனுக்ரஹத்துடன் அளித்தார்கள்.

உபதேசமளித்ததற்கு முதல் நாள் ஸ்வாமிகள் சின்ன காஞ்சிபுரத்தில் தமது மடத்தில் பூஜையை முடித்துக் கொண்டு, அங்கு கூடியிருந்த ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு ஸ்ரீ மடத்திற்கும், சிஷ்யர்களுக்கும் இருக்க வேண்டிய தொடர்பைப் பற்றிச் சில உபதேச மொழிகளை அருளினார்கள். அவற்றின் சுருக்கம்:

“எதிர்காலத்தில் இந்தப் பீடத்தை அலங்கரிக்கத் தக்க ஒரு ஸ்வாமிகளுக்குப் புதிதாக ஆச்ரமம் வழங்க ஏற்பாடுகள் செய்துவரும் இச்சமயத்தில் உங்களுக்கும் சில விஷயங்களைச் சொல்ல விரும்புகிறேன். தற்காலம் இருந்துவரும்

நிலையில் ஸ்ரீ மடத்தின் காரியங்களைச் செவ்வனே நடத்தி வருவதற்கு ஸ்ரீ மடத்தின் சொத்திலிருந்து கிடைக்கும் வருமானம் போதுமானதாக இல்லை. வருமானத்துக்கு மேல் கிட்டதட்ட செலவு ஐந்து மடங்காக ஏற்படுகிறது. ஸ்வாமி பூஜை, மற்றும் மதப்பிரசாரம் பற்றிய முக்கியமான செலவுகள் தாம் மடத்தில் செய்யப்படுகின்றன. புதிதாக ஸ்வாமிகளை நியமனம் செய்வது மாத்திரம் போதாது. ஸ்ரீ மடத்தின் காரியங்களும் சரிவர நடந்துவர வசதிகள் செய்ய வேண்டும். இங்கு கூடியிருக்கும் நீங்களும், மற்றும் வெளியிடங்களிலுள்ள பக்தர்களும் ஸ்ரீ மடத்தின் விஷயத்தில் ஆழ்ந்த அபிமானம் வைக்க வேண்டும். ஒவ்வொரு சிஷ்யரும் தம் குடும்பத்தைக் கவனிப்பதுடன் ஸ்ரீ மடத்தையும் தன் குடும்பம் போலவே பாவித்து அவரவர்கள் சக்திக்குத் தக்கவாறு ஸ்ரீ மடத்திற்குத் திரவிய சகாயம் செய்வதெனத் தீர்மானஞ் செய்து கொள்ள வேண்டும். இக்காலத்தில் குடும்ப சம்ரக்ஷணமே பலருக்குச் சிரமமாக இருக்கலாம். ஆயினும் ஸ்ரீ மடத்திற்குச் சிறிதளவாவது உபசரிக்க வேண்டுமென்ற எண்ணம் கொள்ள வேண்டும்.''

ஆதாரம் : ஸ்ரீ ஜகத்குரு திவ்ய சரித்திரம்— தொகுப்பு : எஸ். சாம்பமூர்த்தி சாஸ்திரி. 1979-ஆம் வருஷப் பதிப்பு - பக்கம் 412.



# குரு பரம்பரை

ஒவ்வொரு மனிதனுடைய ஆன்மீக வாழ்விலும் குரு இன்றியமையாதவராக ஆகிறார். மனிதனின் அறியாமையிலிருந்து நல்வழிக்கு அழைத்துச் செல்பவர் குரு.

முதன் முதலில் கைலாயத்திலுள்ள ஸ்ரீபரமேஸ்வரனின் ஸ்வரூபமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி, தெற்கு நோக்கி வீராசனத்தில் உட்கார்ந்து கொண்டுள்ளார். சின் முத்திரையுடனும், ருத்ராக்ஷ மாலையுடனும் மௌன மந்தஹாஸச் சிரிப்புடன், 'ஸநக', 'ஸநந்தன', 'ஸநாதன', 'ஸநஸ்ஸுஜாத' என்கிற நான்கு மஹரிஷிகளுக்கும், ஞானத்தை மௌன முத்திரையாலும் சின் முத்திரையாலும் உபதேசித்தார்.

ஸ்ரீ குருவினுடைய சாக்ஷுஸ தீக்ஷையின் மூலம் ஞான அனுபவத்தைப் பெற்றார்கள். அதே ஞானத்தை உலகம் படைக்கும் ஸ்ரீமந் நாராயணனும் தன் யோக சக்தியினால் அறிந்து அனுபவித்து உலகம் படைக்கும் பிரும்ம தேவனுக்கு உபதேசித்தார். பிரும்மதேவன் அதே ஞானத்தைத் தன்னுடைய புத்திரனான வசிஷ்ட மகரிஷிக்கும்,வசிஷ்டர் தன் புத்திரனான பராசரருக்கும், பராசரர் தன் புத்திரனான வியாசருக்கும் அந்த ஞானத்தை உபதேசித்தார். வியாசர் தன் புத்திரனான சுகதேவருக்கு அதே ஞானத்தை உபதேசித்தார். சுகர் ஞானியாகிவிட்டபடியினால், கிருஹஸ்தாச்ரமத்தில் பிரவேசிக்காதபடியினால், அந்த ஞானத்தை ஸன்யாஸ பரம்பரைக்கு உபதேசிக்கத் தொடங்கினார்.

  

ஸ்ரீகௌடபாதர் அந்த ஞானத்தைப் பெற்ற ஸந்யாஸ முறையில் முதல் ஆசார்யர். ஸ்ரீ கௌடபாத ஆசார்யர் ஸ்ரீ கோவிந்த பகவத் பாதருக்கு அந்த ஞானத்தை உபதேசித்தார். ஸ்ரீகோவிந்த பகவத்பாதர் கைலாயத்தில் ஸ்ரீ பரமேஸ்வரனாக விளங்குபவரின் அவதாரமாகக் கருதப்படும் ஸ்ரீ ஆதிசங்கரருக்கு அந்த ஞானத்தை உபதேசம் செய்தார்.

ஸ்ரீசங்கரர் ஆயிரக்கணக்கான சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்த போதிலும், முக்கியமான ஸுரேஸ்வராசார்யர், பத்மபாதாசார்யர், தோடகாசார்யர், ஹஸ்தாமலாகசார்யர் என்ற நால்வருக்கு விசேஷமாக ஞானோபதேசம் செய்து தன் சிஷ்யர்களாக ஆக்கிக் கொண்டார்.

ஸ்ரீ ஆதிசங்கரர் தன் ஒவ்வொரு சீடரையும் ஏற்றுக் கொள்ளும்போது, தன்னுடைய விசேஷ சக்தியினால் ஒவ்வொருவருடைய குணாதிசயங்களையும் அறிந்து சிஷ்யர்களாக ஏற்றார். ஸ்ரீ ஆதிசங்கரர் கடைசியாக ஸ்ரீ காஞ்சி மடத்தில் ஸ்ரீகாமாக்ஷியம்மன் சன்னதியின் முன்பு, ஸ்ரீ சக்ர பிரதிஷ்டை செய்து, ஸர்வக்ஞ பீடமேறினார்.

அப்பொழுது தாமிரபரணி நதி தீர பிரதேசத்திலிருந்து ஒரு மாணவன் வந்து ஸ்ரீ ஆதி சங்கரருடன் வாதம் செய்தான். அவனுடைய திறமையையும் ஞானத்தையும் அறிந்து ஸ்ரீ ஆதிசங்கரர், 'ஸ்ரீ ஸர்வக்ஞாத்மா'' என்ற யோக பட்டத்தை அளித்து, தனது சிஷ்யனாக்கிக் கொண்டார்.

ஸ்ரீ ஆதிசங்கரர் முதல் 'ஸர்வக்ஞாத்மா' தொடங்கி இன்றுவரை, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தில்

ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் வரை, குரு பரம்பரை அவிச்சின்னமாய் வந்து கொண்டிருக்கிறது.

ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தன் ஞான திருஷ்டியினாலும் தவ வலிமையினாலும் திரிகாலத்தையும் உணர்ந்தவராய் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளைத் தேர்ந்தெடுத்தார். ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளும் ஸ்ரீ சந்திர சேகரரேந்திர ஸரஸ்வதி சுவாமிகளுடைய அருளுட னும், தன் மனத்தில் தோன்றிய தெய்வ அருட்செயலா லும், பரம்பரையாய் வைதீக குடும்பத்தில் வந்தவரான ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளுடைய ஏழாவது குமாரரான இந்து சமயத்தின் முக்கிய தெய்வங்களான சிவவிஷ்ணு பெயர் கொண்ட 'ஸ்ரீ சங்கரநாராயணன்' என்னும் ரிக்வேத பாடம் பூர்த்தி செய்த மாணவனைத் தேர்ந்தெடுத்தார்.

குரு சிஷ்ய பரம்பரை என்பது தெய்வத்தின் அருளாலே வரக்கூடியது. அதை வைத்துத்தான் "குருவுக்கு உவமை கிடையாது'' என்று ஸ்ரீ ஆதி சங்கரரே ஒரு கருத்தை வெளியிடுகிறார்.

அயஸ்காந்தமணி என்று ஒன்று உண்டு. அந்த அயஸ்காந்தமணியை எந்த இரும்பு பட்டாலும் அதைத் தங்கமாக்கிவிடும்.

ஆனால் இரும்பாக முன்பு இருந்து பிறகு தங்கமானதில் ஓர் இரும்பை வைத்தால் அதைத் தங்க மாக்கும் சக்தி அதற்கும் கிடையாது. எத்தனை இரும் பானாலும் ஒரு அயஸ்காந்தமணியில் பட்டால்தான் அவைகள் எல்லாம் தங்கமாகும்!

ஆனால் குருவினுடைய ஞான பரம்பரையோ அறியாமையிலுள்ள ஒரு மாணவனை ஞானியாக்கி

அவன் மூலம் மற்ற ஒருவனையும் ஞானியாக்கி, இப்படி அடுத்தடுத்து ஒவ்வொரு 'அறியாதவனையும்' ஞானியாக்கும் குரு பரம்பரை ஒன்று உண்டு. ஆகவே இந்த 'குருபரம்பரைக்கு உவமை கிடையாது' என்று ஸ்ரீ ஆதி சங்கரர், 'சதஸ்லோகி' என்ற நூலில் கூறுகிறார். ஆகவே முதன்முதலில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியாய் இருந்து ஞானோபதேசத்தின் பாரம்பரியம் இன்று வரையிலும் ஞானதீபமாக ஒளிவிட்டுக் கொண்டு வருகிறது.

இந்த ஞான தீபத்தை, சிஷ்ய பரம்பரை மூன்றுவித முறைகளால் பெறுகிறது. மந்திர தீக்ஷை, ஸ்பர்ச தீக்ஷை, சாக்ஷுச தீக்ஷை என்று மூன்று வகைப்படும். மந்திரத்தை உபதேசம் செய்து கொடுப்பதாலும் தன்னுடைய கையினாலும், காலினாலும், தொட்டு ஆசீர்வதிப்பதினாலும், கண்களால் அவ்வப்போது பார்த்து ஆசீர்வதிப்பதாலும், சாமான்யமாகவுள்ள ஒருவனை நல்ல ஞானியாக ஆக்கிவிட முடிகிறது. எல்லாத் தீக்ஷைக்கும் முக்கியமானது மனசு. மனப்பூர்வமாய் ஒருவருக்கு ஆசிர்வதிக்கும்போது, அந்த ஆசீர்வாதமானது பரிபூர்ணத்தைப் பெறுகின்றது. கால் ஸ்பர்சத்தினால் ஸ்ரீ கபீர்தாஸ் ஞானத்தை அடைந்தார். ஸ்ரீ மாணிக்கவாசகருக்கு ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியே ஸ்பர்ச, சாக்ஷுச தீக்ஷையளித்ததாகத் தெரிகிறது.

ஆகவே ஒவ்வொருவடைய ஆன்மீக வாழ்க்கையிலும் குருவினுடைய அருளும் ஆசியும இன்றியமையாதது. இது கிட்டுவதற்குத் தெய்வத்தின் அருளைப் பெற வேண்டும். முதலில் தெய்வத்தின் அருளால் குருவைப் பெற்று, பிறகு குருவின் அருளால் தெய்வத் தன்மையை, ஞானத்தன்மையை ஒவ்வொவரும் அடைய வேண்டும்.

# ஸ்ரீ ஜயேந்திரரின் பதில்கள்

* ஸ்ரீ விநாயகரைத் தோப்புக்கரணம் போட்டுத்தான் வணங்க வேண்டுமா?

ஆமாம்.

* ஸ்ரீ அனுமான் தன் இதயத்தைப் பிளந்து தாரக மந்திரமான ஸ்ரீ ராம நாமத்தைக் காண்பிக்கும் படத்தை வீட்டில் வைக்கக் கூடாது, மடங்களில்தான் வைக்க வேண்டும் என்று கூறுகிறார்கள். இது குறித்து தங்கள் மேலான அறிவுரை வேண்டுமே?

ஸ்ரீ ஹநுமார் இருதயத்தைப் பிளந்து தாரக மந்திரமான ஸ்ரீ ராமநாமத்தைக் (உருவத்தை) காண்பிக்கும் படத்தை வீட்டில் வைத்துக் கொள்ளலாம்.

* திருமணங்கள் நடைபெறும் முன்பு அரக்கு வண்ணத்தில் கூறைப்புடவை எடுத்து அணிவிக்கும் காரணம் என்ன?

திருமணம் என்பது இல்லங்களில் நடக்கும் ஒரு மங்களகரமான நிகழ்ச்சி. அதே சமயம் வாழ்க்கையைச் சுபமாகத் தொடங்குவதற்குரிய ஆரம்ப காலமும் ஆகும். இல்லற வாழ்க்கை தொடங்குவதை 'ரஜோ குணத்தின் கடமை' என்பார்கள். அதனால்

தான் திருமணத்துக்கு அரக்கு வண்ணத்தில் கூறைப்புடவை வாங்குவது, அணிவது என்று வகுக்கப்பட்டிருக்கிறது.

• கடவுளரில் ஸ்ரீ ஆஞ்சநேயர் உடல் மட்டும் சிவந்து காணப்படுகிறதே, அதன் தத்துவம் என்ன?

சூரியபகவானிடம் ஆஞ்சநேயர் பணிவிடை செய்து பல அருள் பெற்றவர். அதனால் சூரிய ஒளி பெற்று, ஸ்ரீ ஆஞ்சநேயர் செக்கச் செவேல் என்று சிவப்பாகக் காணப்படுகிறார்.

• நாம் உடுத்திய பழைய துணிகளைப் பிறருக்குக் கொடுப்பது மூலம் வீடு தரித்திரமாகும் என்று சிலர் கூறுகிறார்கள். இது சரியா?

பழைய உடைகளைக் கொடுப்பது தவறல்ல.

• வாசல் நிலைப்படியில் மஞ்சள் குங்குமம் இட்டு, மாக்கோலமும் சில வீடுகளில் போடுகிறார்கள். அதனைப் பின்பற்றலாமா?

வீட்டு நிலைவாசற்படியில் மஞ்சள் குங்குமம் இடலாம்.

• விடியற்காலையில் ஆலயங்களில் சுப்ரபாதம் பாடுவதற்கும், ஆலயம், வீட்டில் பூஜை நேரங்களில் மணி அடிப்பதற்கும் விளக்கம் வேண்டுகிறேன்?

விடியற்காலையில் சுப்ரபாதம் ஒலிப்பதன் மூலம், கேட்பதன் மூலம், நம்முடைய மனம் தூய்மைபெறு வதுடன் நல்ல நேரம் துவங்குகிறது என்று பொருள்.

வீடுகளில் பூஜை நேரத்தில் மணி அடிப்பதால் துஷ்ட-தீய சக்திகள் விலகுகின்றன.

மணியோசை — மங்கல ஓசை.

• செவ்வாய், வெள்ளி ஆகிய இரு நாட்களிலும் நவக்கிரகங்களைப் பிரதட்சிணம் செய்யக்கூடாது என்கிறார்களே? பெரியவர்கள் விளக்கம் தர வேண்டும்?

நவக்கிரகங்களைத் தினமும் வலம் வரலாம்.

• ஒரு காரியம் எங்கள் குடும்பத்துக்கு வெற்றி பெற வேண்டும். அதற்கு நான் முக்கியமாக எந்த தெய்வத்தை வணங்கி, எந்த தோத்திரத்தைச் சொல்ல வேண்டும்?

உங்கள் குடும்பத்தின் குலதெய்வம் எதுவோ அத்தெய்வத்தை நீங்கள் உரிய வழக்கப்படி வழிபட வேண்டும். அந்த தெய்வத்துக்கு உண்டான தோத்திரங்களைத் தினமும் சொல்லி வரலாம்.

உதாரணம்- அம்பாளாக இருப்பின், சக்தி துதிப் பாடல்களைப் பாடலாம்.

• எனக்குத் தீக்குச்சி என்றால் ஒரு அச்சம். தொட மாட்டேன். பார்த்தால் அலர்ஜி வரும். பிறர் விளக்கேற்ற நான் வழிபடுவேன். நானே பூஜை அறையில் லைட்டர் மூலம் குத்துவிளக்கேற்றலாமா?

உங்களுக்கு தீக்குச்சி அலர்ஜி என்றால், லைட்டரால் முதலில் சிறு விளக்கை ஏற்றி அதன் பிறகு பூஜை அறை விளக்கு, குத்து விளக்கு ஏற்றலாம். லைட்டரின் உதவியால் சுவாமி விளக்கு ஏற்றவே கூடாது.

• சுவாமி படங்களுக்குத் தொடுத்த மலர்களை அணிவிக்கும்போது சிக்கல் விழுந்தால், தீய அறிகுறி என்று சொல்லக் கேட்டேன். இது குறித்து தங்கள் விளக்கம்?

மலர் மாலையில் சிக்கல் விழுவதும் தவறல்ல; அதனால் தீய அறிகுறி என்பதும் சரியல்ல.

• ஞானிகள் அமங்கலிகளைப் பார்க்கும் நாட்களில் உணவு அருந்தாமல் இருப்பதன் நோக்கம் என்ன?

அவர்களின் வினைக்குக் காரணம் என்னும் பட்சத்தில், பெரியவர்களை, ஞானிகளை உபவாசம் இருக்கும்படி நேர்ந்தால் பாவம் அதிகமாகவில்லையா?

கணவனை இழந்த விதவைகள் பெரியவரை தரிசனம் செய்ய விரும்பும்போது அவர்களின் பாவத்தை அதிகரிப்பது நியாம்தானா?

அமங்கலிகளில் நிறைய நபர்கள் ஸ்ரீ ஆசாரிய சுவாமிகளைத் தரிசனம் செய்து ஆசி பெற்று வருகிறார்கள்!

அமங்கலியாக இருப்பவர்கள் அந்த வாழ்க்கை முறைப்படி தரிசிக்க வந்தால் அவர்களுக்கும் பாவம் இல்லை.

ஸ்ரீ ஆச்சார்ய ஸ்வாமிகளும் உபவாசம் இருக்க வேண்டிய அவசியம் இல்லை.

* அன்பு-பக்தி இரண்டுக்குமுள்ள அடிப்படை வேறுபாடு என்ன?

பெற்றோர், ஆசிரியர், ஆசார்யர் உயர்ந்தோர், தெய்வம் இவர்கள்மீது கொள்ளும் அன்பே பக்தி என்றுபெயர் பெறுகின்றது.

• ஆலயங்களுக்குச் சென்றால், எங்கெந்த கடவுளுக்கு எத்தனை முறை வலம் வரவேண்டும்?

எந்தக் கடவுளையும் ஒரு முறைக்கு மேல் வலம் வர வேண்டும்.

• இலங்கேஸ்வரன் இராவணன் பக்தனா?

ஆமாம் மகாபராக்கிரமசாலியாக விளங்கிய இராவணன், தலை சிறந்த சிவபக்தனாவான்.

• குற்றங்களை திருத்தி நன்கு வாழ்ந்து வரும் ஒருவனை ஏற்றுக் கொள்ளாத சமயம் உண்டா?

குற்றங்களுக்கு வருந்தி திருந்தி வாழ வருபவர்களை ஏற்றுக்கொள்ளாத மதம் இருக்காது; மக்கள் இருப்பார்கள்!

• நல்ல மனிதர்களுக்கு அடிக்கடி சோதனைகள் வருகின்றன. இது ஏன் குருவே?

அவர்கள் சோதனையில் வெற்றி பெற்று தனது அருளைப் பெற்று உய்ய வேண்டும் என்பதற்காகவே!

• சிவன் கோயிலுக்குச் சென்றால் வழிபட்டு திரும்புகையில் சிறிது நேரம் உட்கார்ந்து வருவது ஏன்?

மகாபலி போன்ற சிவபக்தர்கள் வருபவர்களுக்குத் துணையாகப் புறப்பட்டு வருகின்றார்கள். அவர்களைக் கோயிலிலேயே இருக்கச் செய்ய வேண்டும் என்பதற்காகத்தான் அமர்வது. அத்துடன் சிவ நாமம் சொல்ல வேண்டுமென்பதும் ஒரு காரணம்.

* வீட்டில் ஒருவர் காலமாகிவிட்டால், ஒரு வருடம் வரை கடவுளுக்கு தேங்காய் உடைத்து தீபாராதனை செய்யக் கூடாது என்கிறார்கள்.

ஆனால் மறைந்தவருக்கு எல்லாக் காரியங்களும் முடிந்த பிறகு, ஏதேனும் ஒரு கோயிலுக்குச் சென்று வரவேண்டிய வழக்கம் ஏன்?

ஓராண்டுக்குப் பின் செய்ய வேண்டியது அன்று ஒரு நாள் செய்வது, ஒரு விதிவிலக்கான நியதி யாகும்.

ஆனால் ஓராண்டு முடிந்த பின்பே முழு சுத்தி கிடைக்கின்றது.

* பஞ்சலோக வினாயகரை (இடது பக்கம் துதிக்கை உள்ள விக்கிரகம்) வைத்துப் பூஜை செய்கிறேன்—நியமங்கள் தவறாமல்.

என் நண்பர் ஒருவர் இதைக் கண்டு இப்படி இடது புற துதிக்கை வினாயகரை வீட்டில் வைத்து பூஜித்தல் கூடாது என்றார். ஆற்றிலோ சமுத்திரத்திலோ வேறு எங்கேனும் சேர்க்கணுமென்றார். பூஜையை மட்டும் நிறுத்தி விட்டேன்.

மன நிம்மதி போய்விட்டது. மனம் சாந்தியடைய வழி?

பக்தியுடன் தியானத்தை மேற்கொள்ளுங்கள். அதிகபலன் உண்டு. மனநிம்மதி கிடைக்கும்.

* ஒரு மனிதனின் மரணத்திற்குப் பின்பு என்ன நிகழ்கிறது?

ஒரு மனிதனின் வாழ்நாளில் செய்த நல்ல செயலுக்குத் தீய செயலுக்கு ஏற்றவாறு 'மரணத் துக்குப்'பின், பலன் அவனை அடைகிறது—அதாவது மறுபிறப்பில்.

* ஒவ்வொரு தெய்வத்தின் ஜபத்துக்கும் தனித் தனி ஜப மாலை வேண்டுமா? உதாரணமாக, ராம, நமச்சிவாய, கணபதி, சரவணபவ ஜபங்களுக்கெல்லாம் ஒரே மாலை போதுமா?

ஸ்ரீ கணபதி உபாசகனான நான், தாமரை மணியின் ஜபம் செய்கிறேன். இது சரியா?

தாமரை மணிமாலை எல்லாவற்றிற்கும் உகந்தது.

• நான் திருமணம் செய்து கொள்ள விரும்புபவர் எங்கள் கோத்திரம்தான்.

ஒரே கோத்திரத்தில் திருமணம் கூடாது என்கிறார்கள். மாமா, தாத்தா, பெண்ணைத் தத்து எடுத்துக் கொண்டு திருமணம் செய்து கொள்ளலாம் என்கிறார்கள். இதற்கும் குடும்பத்தினர் சம்மதிக்கவில்லையே, வழி என்ன?

'கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடு' என்று முன்னோர்கள் வழி வகுத்திருக்கிறார்கள்.

ஒரே கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் திருமணம் செய்து கொள்ளக் கூடாது!

• எண்ணெய் தேய்த்துக் கொள்வது போல துர்ஸ்வப்பனம் எனக்கு அடிக்கடி இரவில் வருகிறது. நீங்குவதற்கு ஒரு வழி கூறுங்கள்?

துவர்ஸ்வப்பனம் (கெட்ட கனவுகள்) வராமலிருக்க, படுக்கும் முன்பு ஸ்ரீ ஆஞ்சநேயரை வழிபட்டு, தோத்திரங்கள் கூறிப் படுக்கவும்.

• 'எல்லாம் என் கர்மவினை—' என்று சோதனை நேரத்தில் அலுத்துக் கொள்கிறார்களே, அது என்ன?

வாழ்நாளில் நாம் நல்ல பணிகளை, அறச் செயல்களைச் செய்தால் நல்ல பலன் கிட்டும்.

தீமைகள் செய்தால் தீய பலன் கிட்டும். இதுதான் கர்மபலன் என்னும் சித்தாந்தம்.

• மந்திரங்களை, சுலோகங்களை எழுதுவது உச்சரிப்பது இரண்டில் எது அதிக பலன் அளிக்கும்?

மந்திரங்களை மனத்தால் உச்சரிக்க வேண்டும்.

சுலோகங்களை வாய்விட்டுச் சொல்லலாம்.

இரண்டையும் மன ஒருமைப்பாட்டுடன் செய்தால் அதிகப் பலன்கள் கிட்டும்.

• திருமணம் ஆகாத பெண்கள், லலிதா சகஸ்கர நாமம், 'விஷ்ணு சகஸ்கரநாமம்' சொல்லலாமா? அதற்குத் தனி ஆசாரம் வேண்டுமா?

லலிதா சகஸ்காநாமம், விஷ்ணு சகஸ்கரநாமம் ஆகிய தோத்திரங்களைத் தினசரி நீராடி, தூய ஆடை தரித்துச் சொல்லலாம். பூஜை அறைக்குச் செல்லும் ஆசாரத்தை இதற்கும் கடைப் பிடிக்கவும்.

• காலையும் மாலையும் இரு வேளை தவறாமல் பெருமாள் சந்நிதியில், கோலமிட்டு கிழக்கு முகமாக நல்லெண்ணெய் தீபம் ஏற்றி வருகிறேன்.

குடும்பப் பிரச்னைகளை நீதான் கருணையுடன் தீர்க்கும்படி, பிரார்த்தனையும் செய்து கொண்டிருக்கிறேன்.

பிரார்த்தனை வெற்றியாக முடிந்தால் எதையாவது செய்ய வேண்டுமென்று வேண்டுதலும் செய்து கொள்ள வேணுமா?

ஆண்டவனுக்கு உங்கள் சௌகரியம் போல், பிரார்த்தனைக்கு ஜெயம் கிட்டியதும் செய்யலாம்; வேண்டிக் கொள்ளலாம்.

• ஒரு மனிதனுக்கு நாட்டுப் பற்று அவசியமா? தர்ம சிந்தனை அவசியமா?

தர்ம சிந்தனையும், நாட்டுப் பற்றுமே மனிதர்களுக்கு உரிய சிறந்த பண்புகள்.

• தினமும் ஸ்ரீராமஜெயம் எழுதி வருகிறேன். மனம் அமைதிபடுகிறது. எடுத்த காரியம் ஜெயம் அடைகிறது. நாம் ஜபம் எழுதிய நோட்டுக்களை என்ன செய்ய வேண்டும்?

'மானேஜர், ஸ்ரீகாஞ்சிகாமகோடி மடம், காஞ்சிபுரம்' விலாசத்துக்கு அனுப்பினால் பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.

• திருமணமான ஆண்டில், மாமனார் மாமியாரை காசி கங்கா ஸ்நானத்துக்கு அனுப்பி வைக்கலாமா?

திருமணமான வருடம் அனுப்பக் கூடாது. அடுத்து வரும் ஆண்டில் அனுப்ப வேண்டும்.

• பக்தி செலுத்தி வரும் பரம ஏழைக்குக் கடவுள் எந்த ரூபத்தில் உதவுவார்?

அந்த ஏழையின் கஷ்டங்களைக் கண்டு உபசாரம் செய்யும் (சக்தி படைத்திருக்கும்) ஒருவர் வடிவத்தில்!

• நான் வீட்டிலேயே ராகு காலத்தில் எலுமிச்சம் பழ மூடியில் விளக்கேற்றி வருகிறேன். தொடர்ந்து வீட்டிலேயே ஏற்றி வரலாமா?

தேவியின் ஆலய திருச்சந்நிதானத்தில் ஏற்றுவதுதான் சிறந்தது.

• தினமும் தியானம் செய்ய உட்காருவேன்.

திங்கள்—சிவன், செவ்வாய்—கணபதி, முருகன், புதன்—மகாவிஷ்ணு, வியாழன்—குரு, வெள்ளி—

அம்பாள், சனி—மகாவிஷ்ணு, ஞாயிறு—சூரியன், ஆகிய தெய்வங்கள் நினைவுக்கு வந்து விடுகின்றார்கள்.

ஒருமுகப்படுத்தி தியானம் செய்யும் வழிமுறை என்ன?

தியானத்துக்கு உட்கார்ந்ததும், உங்கள் இஷ்ட தெய்வத்தின் திருவடிகளில் பார்வையைச் செலுத்தவும்.

அந்த தெய்வத்தின் பாதாரா விந்தத்தை மனதில் பதிய வைத்துக் கொள்ளவும்.

இப்படிச் செய்யும் ஆரம்ப நிலை. நாளுக்கு நாள் வளர்ந்து, மனம் ஒருமித்த தியானத்துக்கும் வழி வகுக்கும்.

• சிறு வயது முதல் வாழ்க்கைப் போரில் ஈடுபட்டு களைத்துச் சளைத்து விட்டேன். தெய்வங்களிடம் முறையிடப் போக முடியாத பல தடைகள். தைரியம் உள்ளவள் என்று என்னைச் சொல்வார்கள். இருந்தும், என் நம்பிக்கை குறைந்துவிட்டது. மனநிம்மதியுடன் இனி வாழ வழி கூறுங்கள்?

ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி நம்பிக்கையை ஒருபோதும் கைவிடக் கூடாது!

'துன்பத்திலிருந்து மீள முடியாது, இனி வாழ்வே இல்லை. முடிந்து விட்டது' என்று சோகத்தின் கடைசிக் கட்டத்தில் இருந்தவர்களைக் கூட ஆண்டவன் காத்தருளி, உயர்த்தி, வாழ்வளித்திருக்கின்றான்.

இருக்கும் இடத்திலேயே, சிறிது நேரம் தெய்வ சிந்தனையில் ஈடுபடுங்கள். சோதனைகள் கஷ்டங்கள் நீங்கி விடும்.

• வெளியே கிளம்பும் போது ஒருவர் தும்மினால் அபசகுனம் என்று கலக்கமடைகிறார்கள் சிலர். அதை நல்ல சகுனம் எனவும் சிலர் எடுத்துக் கொள்கிறார்கள். விளக்கம் வேண்டுகிறேன்?

புறப்படும்போது ஒரு தும்மல் அபசகுனம். பல தும்மல்கள் நல்ல சகுனமாக அமையும். நல்லது நடக்கும்.

• தினமும் 5 முகம் உள்ள தீபம் (குத்து விளக்கு) தான் வீட்டில் ஏற்ற வேண்டுமா?

அப்படியொன்றும் விதியில்லை. வசதியிருந்தால் தினமும் குத்து விளக்கு ஏற்றி வைக்கலாம்.

• பெண்கள் திருமணத்தைப் புறக்கணித்து ஆண்களைப்போல துறவிகள், பீடாதிபதிகள் ஆவதில்லை.

வீட்டையும் உற்றார் உறவினர் அனைவரையும் துறந்து, கிறிஸ்தவ மதத்தில் உள்ள 'சிஸ்டர்'கள் போல இந்து மதத்தில் ஆக வழி இல்லையா?

இந்துப் பெண்கள் சமயப்பணி செய்ய மடம் உள்ளதா? இலவச உணவு உடை இருப்பிடம், அளிக்கபடுகிறதா? விவரம் வேண்டுகிறேன்?

பெண்கள் துறவிகளாக மாறுவது மிகக் கடினமானதுதான். சோதனைகள் ஏற்படலாம் என்பதனால் இந்து சமயத்தில் துறவிகளாக மாறுவது பழக்கப் படுத்துவது மிக மிகக் குறைவாக உள்ளது. ஒன்றிரண்டு பெண் துறவிகள் இருக்லாம். அது வேறு.

நம்மில் ஔவையார் திலகவதியார் போன்று சில பெண் குலத் திலகங்கள் தங்கள் வாழ்நாளைத் தெய்வத்துக்கு அளித்தார்கள். தியாகம் மிக்கவர்கள் அவர்கள்.

மற்ற சமயம் போல சமுதாயப்பணி மாத்திரம் செய்து கொண்டு வரும் பழக்கமும் நம்மிடம் இல்லை.

இனி வருங்காலத்தில், பெண்கள் சங்கங்கள் அமைத்து, தக்க பாதுகாப்புடன் சமயப் பணிகள், சமுதாயப் பணிகள் செய்து வரலாமே.

தன்னலமின்றி பல பெண்கள் சங்கங்கள் மூலம் இப்போதும் நற்பணிகளைச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

• வீட்டிலுள்ள பூஜை விக்கிரகங்கள் பிரகாசிக்க, சுத்திகரிக்கும் பவுடர்களைத் தேய்த்து பிரகாசமடையச் செய்யலாமா?

பவுடர்கள் தெய்வச் சிலைகளுக்கும், பூஜை விக்கிரகங்களுக்கும் கூடாது.

புளி அல்லது எலுமிச்சம் பழம் மூலம் பளபளப் பாக்கலாம்.

• செவ்வாய் தோஷம் உள்ள பெண்ணை மணக்கக் கூடாது என்கிறார்களே?

செவ்வாய் தோஷத்திற்கு உரிய பரிகாரம் செய்து கொண்டு, செவ்வாய் தோஷப் பெண்ணை மணந்து கொள்ளலாம்.

• ஸ்ரீகாளி அம்மன் படத்தை வைத்துப் பூஜை செய்யலாமா?

ஸ்ரீகாளி பராசக்தி, ஸ்ரீகாளி படத்தை வைத்துப் பூஜிக்கலாம்.

* பக்தி, ஒருவனிடம் எப்படிப்பட்டதாக இருந்து வர வேண்டும்?

தனக்காக, தன் குடும்பத்துக்காக ஒரு பலனையும் கோராமல், ஆண்டவனை வழிபடுதலே பக்தியாகும்.

* மூர்க்க குணம் எதனால் வருகிறது?

தன் சுபாவத்தாலும், சூழ்நிலையினாலும் ஒருவனுக்கு மூர்க்க குணம் வருகிறது.

* சிவன் கோயிலுக்குச் சென்றால் அங்குள்ள நவக்கிரகங்களை எத்தனை தடவை பிரதட்சணம் செய்ய வேண்டும்?

சிவாலய நவக்கிரகங்களை ஒன்பது முறை பிரதட்சணம் செய்ய வேண்டும். நவக்கிரக வழிபாட்டுக்கு இதுவே உகந்தது.

* முருகனைக் குறித்து, கந்த சஷ்டி விரத நாட்களில் ஆறு நாட்கள் எதுவும் சாப்பிடலாகாது என்கிறார்களே, ஒருவேளை உணவு உட்கொள்ளலாம் என்றும் சிலர் கூறக் கேட்டேன். தாங்கள் கூறும் அறிவுரை?

முருகனைக் குறித்து, கந்தர் சஷ்டியில் முடிந்தவர்கள் ஆறு நாட்கள் உபவாசம் இருத்தல் நல்லது. திரவங்களாக உணவு உண்ணலாம். மாதந்தோறும் சஷ்டி நாளில் ஒரு நாள் உபவாசம் இருந்தால் போதுமானது.

• இறைவன் மனிதனை அடிக்கடி சோதிக்கிறான். சில குடும்பத்தாரை விடாமல் சோதனை செய்கிறான். இது ஏன்?

சோதனைகள் வருவது ஆண்டவன் அருள் கிட்டுவதற்கு அறிகுறியாகும்.

• சில திருமணங்கள் ஜாதகப் பொருத்தங்கள், நல்ல நாள், நல்ல நேரம், கடவுள் சன்னிதானம், பெரியவர்கள் ஆசிகள் ஆகியவை சேர்ந்து நடைபெறுகின்றன. அப்படிப்பட்ட திருமணங்கள் கூட (கணவன்-மனைவி) நிலைப்பதில்லையே, ஏன்?

இப்படி நடப்பது வினையின் பயனே. அதனால் தான் பெரியவர்கள் எப்போதும் 'நல்லதே செய்'; 'தர்மம் செய்'; 'புண்ணியமானவற்றைச் செய்' என்று கூறுகிறார்கள்.

• சில கோவில்களில் (தமிழகத்தில்) ஆண்களைச் சட்டையுடன் செல்ல அனுமதிப்பதில்லையே? அதுவும் கேரளாவில் மிகவும் கண்டிப்பாக இருப்பது ஏன்?

பண்புகள் நிறைந்த நமது நாட்டில் ஆண்கள் மேலாடையை—துண்டை—இடுப்பில் அணிவது மரியாதைக்கு அடையாளமாகும்.

மேலாடை இல்லாமல் எல்லா ஆலயங்களுக்கும் சென்று வழிபடும் முறையைக் கடைபிடிப்பது உசிதமான செயலாகும்.

• என் மனத்தில் ஓயாமல் சஞ்சலம் இருந்து கொண்டே இருக்கிறது. இதை நீக்க, எனக்கு ஏதாவது ஒரு வழி கூற வேண்டுகிறேன்?

நீங்கள் தொடர்ந்து ஸ்ரீராமநாமாவை எழுதி வரவும். மனத்தைப் பிடித்த ஓயாச் சஞ்சலம் அகன்று விடும்.

* பெண்கள் சுந்தர காண்டம் பாராயணம் பண்ணலாமா? இல்லை (குடும்பத் தலைவர்) ஆண்கள் மட்டுமே பாராயணம் பண்ண வேண்டுமா? அதன் பலன்கள் என்னென்ன?

ராமாயண சுந்தர காண்டம் பெண்களும் பாராயணம் பண்ணலாம். அதனால் சுப நிகழ்ச்சிகள் நடைபெறும்.

* பொதுவில் கூறினால், இன்றைய பெண்களிடம் பொறுமையும் சகிப்புத்தன்மையும் குறைந்து வருவதன் காரணம்?

நீங்கள் கேட்பதைப் பார்த்தால் பெண்களைவிட ஆண்களிடம் இந்த இரண்டும் குறையாமல் இருந்து வருவதாக நினைக்கிறீர்கள் போலும்!

ஆண்—பெண் இருவரும் எல்லாவற்றிலும் ஒத்துப் போவது முக்கியமானது.

பொறுமை—சகிப்பு இரண்டிலும் ஆண்களுக்குச் சற்றும் குறைவில்லாதவர்கள் பெண்கள். 'பொறுமையில் பூமாதேவி' என்றே சிறப்பித்துப் பெண்களை ஆன்றோர்கள் கூறியிருக்கிறார்கள்.

* எனக்குத் தொட்டிலில் வைத்த பெயர் மீனாட்சி. ஆனால் கூப்பிடும் பெயர் ராகினிஸ்ரீ. கோவிலில் நான் எந்தப் பெயரில் அர்ச்சனை செய்ய வேண்டும்?

தொட்டிலில் வைத்த பெயருக்குத்தான் கோயிலில் (மற்றும் சுபமான பிரார்த்தனைகளில்) அர்ச்சனை செய்யப்பட வேண்டும்.

* வீட்டில் உபநயனம் ஆகாதவர்கள் சத்திய நாராயண பூஜை செய்து வரலாமா?

  

உபநயனம் ஆகாதவர்கள் சத்திய நாராயணபூஜை செய்ய வேண்டாம்.

அதற்குரிய தோத்திரங்களைப் பாராயணம் செய்தால் போதும்.

* என்னைப் போன்று, அலுவலகம் செல்லும் பெண்கள், இறை வழிபாட்டுக்கு ஆலயத்திற்கு எந்த நேரம் செல்லுதல் நல்லது?

ஆலய வழிபாட்டுக்கு அதிகாலையிலும் மாலை வேளைகளிலும் செல்வதே முறையானது; உகந்தது.

• கடவுள் பூஜைக்கு உகந்த மலர்கள் என்னென்ன? என்னென்ன மலர்களை விலக்க வேண்டும்?

விநாயகருக்கு அடுக்கு நந்தியாவர்த்தம், சிவனுக்குத் தாழம்பூ, தவிர்க்கப்பட வேண்டும்.

சிவனுக்கு வில்வ அர்ச்சனை விசேடம். கடவுள் பூஜைக்கு, ஒரே பெயர் கொண்ட புஷ்பத்தில் இரண்டு மூன்று நிறங்கள் கொண்டவை கூடாது. (உதாரணம்: நீலம், வெள்ளை, சிவப்பு சங்கு புஷ்பம்) விஷ்ணுவுக்குத் துளசி உகந்தது. அம்பாளுக்கு வெண்ணிற வாசனை மலர்கள் உகந்தவை.

* எனக்கு வாலிப வயதுதான். இரவில் அடிக்கடி தூக்கமில்லாத நாட்களாகி வருகிறது. தப்பித் தவறி என்றேனும் ஆழ்ந்து தூங்கும் நாட்களில் பயங்கர, கெட்ட கனவுகள் வந்து விடுகின்றன. இரவில் நிம்மதியாகத் தூங்க, நான் எந்தக் கடவுளைத் தினமும்

வழிபட வேண்டும்? . ஏதேனும் தோத்திரம் இருந்தால் தெரிவியுங்கள்?

ஆஞ்சநேயரை நினைப்பதால் புத்தியும் தேக பலமும் தைரியமும், பயமின்மையும் தோன்றும். சித்த தோஷம் நீங்கும்.

" புத்திர்பலம் யசோதைர்யம்
நிர்ப்பயத்வமரோகதா
அஜாட்யம் வாக்படுத்துவம் ச
ஹனுமத் ஸ்மரணாத்பவேத்."

இந்தச் சுலோகத்தை மனப்பாடம் செய்வது நல்லது. படுக்கையில் ஒருமுறை சொல்லிவிட்டு நித்திரை கொள்ளவும்.

• என் நண்பர் எவர்சல்வர் பாத்திரம் விசேட நாட்களில் தானம் தருகிறார். இது உகந்ததா?

என் வீட்டில் எவர்சில்வர் தட்டுகளை, கிண்ணங்களைப் பூஜைக்கு வைத்துள்ளேன். எவர்சில்வரைப் பூஜைக்கு உபயோகிக்கலாமா?

எவர்சில்வர் பாத்திரங்களைத் தானம் கொடுக்கக் கூடாது. (இது இரும்பு வகையைச் சேர்ந்தது) இதேபோல் பூஜைப் பாத்திரங்களாகவும், எவர் சில்வர் கூடாது.

* ஆலயங்களில் பிரதட்சணம் செய்கையில், சன்னதிக்குப் பின்புறத்திலும் சிலர் வணங்குவதைக் கண்டேன். ஆலயத்தின் பின்புறமும் வணங்க வேண்டுமா?

கோயில் பிராகாரத்தில் (ஆலயபின் பகுதியிலும்) கூட இறைவனுக்கு வணக்கம் செலுத்துவதற்குத் தான்.

* கணபதிக்கு—மூஞ்சூறு; முருகனுக்கு—மயில்; திருமாலுக்கு—கருடன்; பரமசிவனுக்கு-காளை (ரிஷபம்); காலதேவனுக்கு-எருமை; சனீசுவரனுக்கு-காகம் வாகனங்களாக இருப்பதன் உள் அர்த்தம் என்ன?

ஒரே உற்சவமூர்த்திக்கு யானை, குதிரை, கிளி, முதலியன திருவிழாக்களில் வாகனங்களாகப் புறப்பாடும் காண்பது எதற்காக?

எல்லா உயிரினங்களுக்கும் அருள்பாலிக்கும் உன்னத நோக்கத்துடன்தான் உயிரினங்களை வாகனங்களாகக் கடவுள் ஏற்றுக் கொண்டுள்ளார். இதைக் கூறுமுகமாகத்தான் ஏற்பட்டவையே வாகனங்கள், திருவிழாக்களில் உலாவரும்.

* சிவாலயங்களில் வழிபட்டுத் திரும்பும்போது சண்டிகேஸ்வர் சன்னதியில் சொடுக்கு, கைதட்டல் சப்தமிட்டுச் செல்லுகிறார்கள் பலர்.

சிலர் இதுபோன்று சப்தம் எழுப்பக்கூடாது என்பர். இதற்குக் குருபீடம் விளக்கம் தருக.

ஸ்ரீபரமேஸ்வரனைத் தரிசனம் செய்து வந்த பயனைப் பரிபூரணமாக அடைய அவருடைய பக்தராகவும், தபஸ்வியாகவும் உள்ள சண்டிகேஸ்வரருக்கு நினைவுபடுத்தும் வகையில் கைசொடுக்கப்படுகிறது.

* குருவிடம் ஒரு முக்கிய சந்தேகம். நான் தாலி பாக்கியம் இழந்துவிட்டேன். பித்ருக்கள் சாபம் நீங்க, அரிசி-பருப்பு, வாழைக்காய், அமாவாசை நாளில் தானம் தரலாமா?

ராகுகாலத்தில் எலுமிச்சம் பழ தீபம் நான் ஏற்றி வரலாமா?

அமாவாசைக்குத் தானம் தரலாம். ஆனால் விளக்கு பூஜை செய்ய வேண்டாம்.

* குடும்பத்தில் தொடர்ந்து கஷ்டங்கள் சோதனைகள். கஷ்டங்கள் நீங்க, பூஜை அறையில் தேங்காய் உடைத்து நல்லெண்ணெயை அதில் ஊற்றித் தீபம் ஏற்றலாம் என்கிறார்கள். சிலர் அப்படிச் செய்யக் கூடாது என்றும் சொன்னார்கள்.

குருவின் ஆக்ஞைப்படி செய்வேன்?

பூஜை அறையில் இப்படி விளக்கேற்றலாம், தவறில்லை.

* வீட்டில் மகள், அல்லது மருமகள் கர்ப்பம் அடைந்து இருக்கும்போது, மகன் அல்லது மருமகன் சபரிமலை யாத்திரை செல்லலாமா?

ஐந்துமாதம் வரையில் அவர்கள் சபரிமலை யாத்திரை செல்லலாம். அதற்குமேல் கூடாது.

* நான் செவ்வாய் தோஷம் உள்ள பெண். எனக்குத் திருமணமாகி விட்டது. நான் தீர்க்க சுமங்கலியாக இருக்க, தினமும் என்ன சுலோகம் சொல்ல வேண்டும்?

'சௌந்தர்யலஹரி' யில் 99 வது சுலோகத்தைப் பாராயணம் செய்யவும்.

* மாமனார் இல்லாத வீட்டில், மருமகள் அமாவாசையன்று, காலையில் வாசற்கோலம் போடுவது தவறாகுமா?

தவறுதான்.

* வீட்டில் நிறைந்த சுபிட்சமும் நற்பயன்களும் விளைய வேண்டும்?

இவற்றுக்காக வேலைக்குப் போகும் என்போன்ற பெண்கள் எந்தப் பூஜையைச் செய்து வர வேண்டும்?

உங்கள் வீட்டுப் பூஜை அறையில் உங்கள் வீட்டுப் பெரியவர்கள் செய்து வரும் பூஜையைப் பின்பற்றவும். உங்கள் புகுந்த வீட்டில் குலதெய்வம் வேங்கடாசலபதி என்றால் அதைத்தான் நீங்களும் வழிபட வேண்டும். சுபிட்சம் பெருகும்.

• காளி, சனீஸ்வரர் கோயில்களில் அர்ச்சனை செய்த தேங்காய் பழம் பூ வெற்றிலையை வீட்டிற்குக் கொண்டு வரக் கூடாதா? அர்ச்சகரிடமே சேர்க்க வேண்டுமா எல்லாவற்றையும்?

பிறருக்குக் கொடுத்து விடுவதும் நல்லதே.

• வீட்டிலேயே ஆண்டவனைப்பூஜிப்பது நல்லதா? ஆலயத்திற்குச் சென்று வழிபடுவது நல்லதா?

வீட்டிலேயே ஆண்டவனை வழிபடுவது நல்லது. மற்றும் ஆலயத்தில் வழிபடுவது, அங்கே சரிவர பூஜைகள் நடைபெற பொருளால் உதவுவது — சரீரத்தால் தொண்டு புரிவது-முன்பு சொன்னதைக் காட்டிலும் மிக உயர்ந்தது.

• சில கோவில்களில் பாமாயில் ஊற்றி விளக்கேற்றுகிறார்கள். இப்பகுதியில் பாமாயிலுடன் நெய், நல்லெண்ணெய் மற்றும் விளக்கெண்ணெய் ஆகிய ஐந்து எண்ணெய் கலந்து விளக்கேற்றலாமா? இதற்குக் குருபீடம் விளக்கம் தருக?

பாமாயிலினால் விளக்கேற்றக் கூடாது. தேங்காய் எண்ணெயிலும் கூடாது.

நல்லெண்ணெயில்தான், வீடு ஆலயங்களில் விளக்கேற்ற வேண்டும். கோயில் விளக்குகளுக்கு இலுப்பை எண்ணெய் மிகச் சிரேஷ்டமானது.

• கடந்த பத்து வருடங்களாக நான் தினசரி காலை லலிதா சகஸ்ரநாமம் படித்து வருகிறேன்.

உலர்ந்த திராட்சை, சர்க்கரையிட்ட பால் நைவேத்தியமுடன் கர்ப்பூர ஆரத்தி செய்கிறேன். இது போதுமா?

லலிதா சகஸ்ரநாம பாராயணத்துக்குப் பிறகு திராட்சை கல்கண்டு நைவேத்தியமுடன் கற்பூர ஆரத்தி செய்யலாம். வசதி உள்ளவர்கள் சர்க்கரைப் பொங்கல் நைவேத்தியமும் செய்யலாம்.

* துர்க்கைக்கு, ராகுகாலத்தில் எலுமிச்சை மூடியில் ஆண்களும் விளக்கு ஏற்றலாமா, கூடாதா?

துர்க்கைக்குப் பெண்கள்தான் எலுமிச்சம் பழம் மூடியில் விளக்கு ஏற்றுவது வழக்கமாக இருந்து வருகிறது. பெண்கள் இதைப் புனித கடமையாகவும் செய்கிறார்கள்.

ஆண்கள் ராகு காலத்தில் வழிபடலாம். உபாசனை செய்யலாம்.

• எங்கள் வீட்டில் மாக்கல்லில் உருவான பிள்ளையார், சிவலிங்கத்துக்கு (நந்தியுடன் கூடியது) வெள்ளிதோறும் அபிஷேகம் செய்கிறேன். பூஜை செய்கிறேன். வீட்டிற்கு வந்த ஒரு பெரியவர் இதற்கு ஆட்சேபம் கூறினார். குருவின் பதில் என்னவோ?

மாக்கல்லால் ஆன பிள்ளையார், சிவலிங்கம் பிளாஸ்டிக்கில் செய்யப்பட்ட தெய்வ உருவங்களைப் பூஜை செய்ய வேண்டாம்.

* அடியேன் இல்லத்தில் நவராத்திரி ஒன்பது நாட்களிலும் லலிதாம்பாள் சோபனம் பக்தியுடன் சொல்லி, சுமங்கலிகளுக்கு வெற்றிலை, பாக்கு, பழம்,

தேங்காய், மஞ்சள், குங்குமம், வெள்ளிப் பணமுடன் வழங்கி வருகிறேன். எவர்சில்வர் குங்குமச் சிமிழ் அப்போது கொடுக்கலாமா?

எல்லா மங்கலப் பொருட்களும் கொடுப்பது சரியானவை. ஆனால் குங்குமம் எவர்சில்வர் சிமிழில் கொடுக்கக் கூடாது. இது மட்டும் சரியானது அல்ல.

• கல்யாணம் போன்ற சுபநாட்களில் பட்டுப் புடவை, வேட்டி உபயோகப்படுத்த வேண்டாம் என்று தாங்கள் கூறியதாக அறிகிறேன். குருவின் நேரடி விளக்கம் வேண்டுகிறேன்?

கல்யாணங்களுக்கு பல உயிர்களைக் கொன்று தயாரித்த பட்டுப் புடவை, பட்டு வேட்டிகளை அணிய வேண்டாம் என்று ஸ்ரீமடம் வெகு கால மாகவே கூறி வருகிறது.

விருப்பம் உள்ளவர்கள் கல்யாண விசேடங்களுக்கு அகிம்சா பட்டு தயாரிப்புகளை உபயோகிக்கலாம். (கதர்; சர்வோதய சங்கங்கள் இதைத் தயாரித்து விற்பனை செய்கிறது)

• எனது மாமனாரும், மாமியாரும் காலமாகி 21 வருடங்கள் ஆகிறது. இதுவரை இல்லாமல் இப்போது பல நாட்கள் கனவில் மாமனார், மாமியார் வருகிறார்கள். வீட்டில் உணவு உண்பதைப் போலக் கனவில் பல காட்சிகள்.

நானும் கணவரும் அவர்களுக்குத் திதி வைப்ப தில்லை. காரணம் கணவரின் சகோதரர் திதி வைக்கிறார்.

ஒவ்வொரு மகாளய அமாவாசைக்கு மட்டும் வேட்டி புடவை வைத்துப் படைக்கிறேன்.

இதற்குப் பரிகாரம் கூறினால் அதன்படிச் செய்ய விரும்புகிறோம்?

சிரார்த்தம் (திதி) போன்றவைகளை வீட்டில் மூத்தவர்கள் செய்தாலும், மற்ற சகோதர சகோதரிகள் அந்த நாளில், சேர்ந்து இருக்க வேண்டும். தனித் தனியாக இருக்கும் சகோதரர்களும் திதி செய்வது தவறல்ல.

பித்ருக்கள் கனவில் அடிக்கடி வருவதனால், இராமேஸ்வரம் சென்று, 'திலஹோமம்' செய்து விட்டு வாருங்கள். இதுதான் பரிகாரம்.

• என்னுடைய தாயார் வீட்டில் ஸ்ரீவரலக்ஷ்மி விரதம் செய்யும் வழக்கம் உண்டு. ஆனால் மாமியார் வீட்டில் இல்லை. அதனால், நான் வரலக்ஷ்மி நோன்பு எடுத்துக் கொள்ளலாமா?

ஒருவழியில் அம்பாளைப் பூஜிப்பது தானே என்று தோன்றுகிறது. புதியவளான நான், வரலக்ஷ்மி நோன்பு எடுத்துக் கொள்ளலாமா? வரும் ஆவணி முதல் செய்யத் தொடங்க அருளாசி அருள்வீர்களா?

உங்கள் தாயார் வீட்டில் வரலக்ஷ்மி விரதம் இருந்து வருவதால், நீங்கள் புதியதாக எடுத்துக் கொள்ளலாம்.

யார் வீட்டில் வரலக்ஷ்மி பூஜை செய்து கொண்டு இருக்கிறார்களோ, அவர்கள் மூலம் எடுத்துக் கொள்ளவும். மனமார்ந்த ஆசிகள்.

• கோவிலுக்குச் சென்று செலவழிக்கும் பணத்தை, என்னிடம் யாசகம் கேட்கும் ஏழைகளுக்குத் தருகிறேன். என் தோழிகள் இதற்காகக் குற்றஞ் சாட்டுகிறார்கள். இது சரியா?

நீங்கள் கோவிலுக்குச் சென்றும் வழிபடலாம், ஏழைகளுக்குத் தர்மமும் செய்யலாம். ஆலயங்கள் கட்டுவதே, பக்தர்கள் வந்து வழிபடுவதற்காகத் தான்.

• வீதியில் விற்கப்படும் கல் மாவைக் கொண்டு பூஜை அறையில் கோலம் போடலாமா?

கூடாது. அரிசி மாவால்தான் பூஜை அறை, ஆலயங்களின் வாசல் முதலியவற்றுக்குக் கோலம் போட வேண்டும்.

• மறைந்து விட்ட பெரியவர்கள் தாய்—தந்தை புகைப்படங்களுக்குக் கற்பூர ஆரத்திக் காட்டலாமா?

பூஜை அறையில் தெய்வப் படங்களுடன் பெற்றோர் படங்களையும் சேர்த்து வைத்து வணங்கலாமா?

முன்னறி தெய்வமான பெற்றோருக்குக் கற்பூர ஆரத்தி காட்டலாம்.

தெய்வப் படங்களுடன் வைத்து வணங்கலாம்.

• வீட்டில் விளக்கேற்ற மண் விளக்கு, பித்தளை விளக்கு, எவர்சில்வர் விளக்கு இவற்றுள் எது சிறந்தது?

மண் விளக்கு, பித்தளை விளக்கு இரண்டும்.

• கோயில் பிரசாதங்களாகப் பெறும் திருநீறு, குங்குமம் வீட்டில் நிறைய சேர்ந்து விடுகிறது. அந்தப் பிரசாதங்களை மீண்டும் கோயில் தூண் கிண்ணங்களில் சேர்க்கலாமா?

கூடவே கூடாது: ஆறு குளம் போன்ற நீர் நிலைகளில் கரைத்து விடலாம்.

• இயற்கையாகவே நான் பக்தியுள்ளவள். ஆலயங்களுக்குத் தினமும் செல்வேன். பூஜை தினமும் செய்வேன். அடிக்கடி உடலில் நோய் வந்து தொல்லைப் படுத்துகிறது. இத்தொல்லை தீர என்ன செய்யலாம்?

தினமும் உங்கள் இஷ்ட தெய்வத்தைத் தோத்திரம் பண்ணுங்கள். வியாதிகள் தீரும்.

• 'ராம' என்னும் நாமாவை நேரம் கிடைக்கும் பொழுதெல்லாம் சொல்லலாமா? கூறினால் என்னென்ன பலன்கள் கிடைக்கும்?

ராம நாமத்தை நேரம் கிடைக்கும் போதெல்லாம் சொல்லலாம். மன அமைதி கிடைக்குமே!

• எனக்கொரு சந்தேகம். ஜகத்குரு தீர்க்க வேண்டுகிறேன்.

சுமங்கலிப் பிரார்த்தனைக்கு 9 கஜம் புடவைதான் வைத்து, சாப்பாடு சுமங்கலிகளுக்குப் போடுகிறோம்.

இப்போது 9 கஜம் வடக்கே கட்டுபவர்களைப் பார்ப்பது அரிது.

ஆறு கஜம் புடவை சுமங்கலிப் பிரார்த்தனைக்கு வைக்கலாமா?

சுமங்கலிப் பிரார்த்தனைக்குக் கட்டுபவர்கள் எப்படி இருந்தாலும், சுமங்கலிகளுக்கு 9 கஜம் புடவைதான் கொடுக்க வேண்டும்.

• சந்திரனில் குடியேறுகிற அளவுக்கு இன்று விஞ்ஞானம் வளர்ந்து விட்டது. விண்வெளியில் மிதக்கிறார்கள். கம்ப்யூட்டர், இயந்திர மனிதன் (ரோபோ) என்றெல்லாம் வளர்ந்து விட்டோம். மனித விஞ்ஞான அறிவும் ஆற்றலும் பெருகப் பெருக,

கடவுளை நம்பாத நிலை உருவாகும் அபாயம் உண்டாகுமா?

விஞ்ஞானத்தின் மூலம் சந்திரமண்டலம் சென்றவர்கள்தான், கடவுளிடம் இன்றைக்கு அசைக்க முடியாத பக்தி—நம்பிக்கை உடையவர்களாக இருக்கிறார்கள்.

• பெரும்பாலான கோயில்களில் பலிபீடம் உள்ளது. அதன் காரணம்?

பலிபீடம் கோயிலின் ஓர் அங்கம். அது இருந்தால் தான் கோயிலின் அமைப்பு முழுமை பெறும்.

• எனக்கு இன்னும் திருமணம் ஆகவில்லை. திருமணம் ஆகாத பெண்கள் பௌர்ணமி பூஜை தொடர்ந்து முறையாகச் செய்து வந்தால் நல்ல பலன் உண்டு என்று கூறுகிறார்கள்.

பௌர்ணமி பூஜையை எப்படி ஆரம்பிப்பது?

பௌர்ணமி பூஜையைத் தொடர்ந்து செய்பவர்களை நாடி அறியவும். பௌர்ணமி அன்று இரவில் அம்பாளைத் தோத்திரம் செய்து பூஜை செய்வது மிகவும் உயர்ந்தது. நல்ல பலன் அளிக்கும் பூஜையாகும்.

பௌர்ணமி பூஜை செய்ய முடியாதவர்கள், அன்று சந்திரனைப் பார்த்தேகூட தோத்திரங்கள் சொல்லலாம்.

நல்ல செயல் நன்மையே தரும்!

• ஸ்ரீமத் புவனேஸ்வரி சுவாமிகள், மதுரை ஸ்ரீ பத்ரகாளியம்மன் சந்நிதியில் 'துர்க்கா விஜய ஸ்தம்பம்' நிறுவுவதற்காக 'ஜெய ஜெய துர்க்கா' என்ற

நாமத்தை 51,000 தடவை எழுதி அனுப்புமாறு பணித்திருக்கிறாரே. பெண்கள் மாதவிலக்கு சமயங்களில் எழுதலாமா?

கூடாது.

* பில்லி சூனியம் என்பது உண்மையென்று கூறியுள்ளீர்கள். அதனால் பாதிக்கப்படுபவர்களுக்கு அதிலிருந்து விடுபடுவதற்கு என்ன செய்ய வேண்டும் என்று கூறுங்கள்?

மயிலை சுந்தரராம குருஜி போன்ற தகுந்த மனிதர்கள், மாந்திரிகர்கள் மூலம் வெளியேற்ற வேண்டும்.

* என் மாமியார் வீட்டில் குலதெய்வம், பூஜைகள் முதலியவற்றை எதுவும் விளக்கமாகச் சொல்லவில்லை.

எங்கள் குலதெய்வம் பெரியாண்டவர் என்று சொல்கிறார்கள். வீட்டில் விசேடம் என்றால் மைலம் சென்று முருகன் கோயில் சென்று அர்ச்சனை, பூஜைகள் செய்கிறோம்.

நானும் முருகனை இஷ்ட தெய்வமாக வழிபடுகிறேன்.

'பெரியாண்டவர்' என்றால் எந்த தெய்வத்தைக் குறிக்கும்?

பெரியாண்டவர் என்றால் சிவபெருமானையே குறிக்கும். சிவபிரானின் அம்சமான முருகனையும் ஆண்டவர் என்று அழைப்பதுண்டு. (பழநியாண்டவர் முருகன் தான்).

ஆகவே முருகனைப் பூஜித்தால் நன்மையே கிடைக்கும்.

• எங்கள் வீட்டுப் பூஜை அறையில் சஞ்சீவி பர்வதமுடன் நிற்கும் ஸ்ரீ ஆஞ்சநேயர், வேல் தலைக்கு மேல் உள்ளபடி நிற்கும் முருகன் படமும் உள்ளன.

வீட்டில் பூஜிக்கலாமா கூடாதா? என் சந்தேகத்தை நண்பர்கள் எழுப்பி விட்டனர்.

என் ஐயத்தைத் தீர்க்க வேண்டும்?

பாலமுருகனையும், சஞ்சீவி ஆஞ்சநேயரையும் பூஜை அறையில் வைத்துப் பூஜை செய்யலாம்.

• நான் தினமும் சுந்தரகாண்டம் படித்து வருகிறேன். கணவரும் நானும், குழந்தைகளும் வீர ஆஞ்சநேயர், பகவதி இரு தெய்வங்களையும், வழிபடுகிறோம். சிறு தொழிற்கூடம் வைத்திருக்கிறோம்.

சமீப காலமாக, தொழிலில் பலத்த சரிவு, பணக் கஷ்டம், மனக் கஷ்டம், நோய் உபாதைகள் எங்கள் மூவரையும் துன்பப்படுத்துகிறது.

மீண்டும் தொழில் செழிக்க, பணக் கஷ்டங்கள், மனக் கஷ்டங்கள் நீங்க ஒரு தோத்திரம் கூறுங்கள். ஜபிக்கிறோம்.

தொழிற்கூட முகப்பில் ஸ்ரீ ஆஞ்சநேயரை வைக்கலாமா?

இந்தத் தோத்திரத்தைத் தினசரி பாராயணமுடன் கூறி வாருங்கள்:

"தேஹி ஸௌபாக்யம். ஆரோக்கியம்,
தேஹிமே; பரமம் ஸுகம்'
ரூபம் தேஹி ஜயம் தேஹி;
யசோ தேஹித் விஷோஜஹி."

தொழிற்கூடத்தில் ஆஞ்சநேயர் படம் வைத்துப் பூஜிக்கலாம். தவறேதும் இல்லை.

* ஒரு மனிதன் எத்தனை கொடிய பாவம் செய்திருந்தாலும், தனது தவறுகளை உணர்ந்து கடவுளிடம் மானசீகமாக மன்னிப்புக் கேட்டால் கிடைக்குமா? கடவுள் மன்னிப்பாரா? தண்டிப்பாரா?

செய்த தவறுகளுக்குக் கண்ணீர் சிந்தி, கடவுளைப் பக்தியுடன் வணங்கினால், தண்டனையின் கடுமை குறையும்.

தெய்வம் மன்னிக்கும். பாவத்துக்குத் தண்டனைகள் ஏற்பட்டாலும் சமாளிக்கத் தைரியமும் ஏற்படும்.

* பசுமாடு ஞாயிற்றுக் கிழமை கன்று போட்டால் வீட்டில் வைத்திராமல் விற்றுவிட வேண்டுமா? இது பற்றித் தங்கள் விளக்கம் வேண்டும்?

ஞாயிறு பசுமாடு வீட்டில் கன்று போட்டால், வீட்டில் வைத்துக் கொள்வது அவ்வளவு உசிதமல்ல.

கோவிலுக்கு விட்டுவிடலாம். நல்லது கிடைக்கும்.

* எங்கள் இல்லத்தில் ஸ்ரீ சத்திய நாராயண பூஜை செய்ய ஆசைப்படுகிறோம். அதை எவ்வாறு தொடங்குவது? விரதம் இருக்கும் முறைகளைத் தெரிவித்தால் மிகவும் உதவியாக அமையும்?

இது சம்பந்தமாக முழுவிவரம் அடங்கிய புத்தகம் இருக்கிறது. விளக்கங்கள் அறியலாம்.

விலாசம் :
பவானி புக் சென்டர்,
சென்னை-33.

ஸ்ரீ.—3

• ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாள் அருளிய 'ஸௌந்தர்யலஹரி' தோத்திரத்தின் உயர்வு பற்றிக் கூற வேண்டுகிறேன்?

ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதாள் கைலாசத்திலிருந்து பெற்று வந்த அம்பிகையின் ஸ்தோத்திரமாகும் 'ஸௌந்தர்யலஹரி.'

'மந்திர சாஸ்திரமுமாகும்' இந்தத் தோத்திரம்.

• எங்கள் ஊர் பிள்ளையார் கோவிலில், ஒரு வெள்ளிக்கிழமையில் 'சுக்லாம்பரதரம்' குட்டி ஒரு பெண் விளக்குப் பூஜை செய்தார்? அப்பிராமணர்கள்கூட இப்படிச் செய்யலாமா?

செய்யலாம்.

• ஓயாத மனச் சஞ்சலத்தைத் தவிர்க்க ஒரு வழி கூறிட வேண்டுகிறேன்?

இறைவனது திருப்பாதங்களில் மனத்தைச் செலுத்தி, அவன் நாமத்தை ஜபித்து வந்தால், மனச் சஞ்சலத்தைத் தவிர்க்கலாம்.

• எனக்கு எப்போது சாவு வந்து விடுமோ என்ற நினைவே அலைமோதுகிறது. அப்படி அதை நினைத்து வருவது கோழைத்தனம் என்று தெரிந்தும், அந்த சாவைப்பற்றி நினைப்பு வருவதை தடுக்க வழி ஒன்று கூறுங்கள்?

எந்த நேரமும் தெய்வ நாமத்தை ஜபித்து வரவும் உங்கள் நினைவு நல்லதில் பதியும். சாவு வருமோ என்ற வீண் பயத்தைத் தவிர்த்துக் கொள்ள உதவும்.

• கன்னத்தில் வைத்துக்கொண்டு நாடியைத் தாங்கியபடி உட்காரவோ நிற்கவோ கூடாது என்கிறார்களே, ஏன்?

சோகத்தைக் குறிக்கும் நிலை அது என்பதனால் அப்படிக் கன்னத்தில் வைத்துக் கொண்டு உட்கார வும் கூடாது. நிற்கவும் கூடாது.

• நான் தினந்தோறும் காலை, மாலை 'கந்தர் சஷ்டி கவசம்' படித்து வருகிறேன். தினமும் படித்தால் சோதனைகள் வருமென்பதைக் கேள்விப் படுகிறேன். தினமும் படிக்கலாமா? அல்லது முருகனுக்கு உகந்த 'சஷ்டி' தினத்தில் மட்டும் படிக்க வேண்டுமா?

கந்தர் சஷ்டி கவசம் முருகன் வழிபாட்டுக்குரிய உன்னத தோத்திரம். நீங்கள் தினந்தோறும் காலை-மாலை இருவேளைகளிலும் கந்தர் சஷ்டி கவசம் படித்துப் பாராயணம் செய்யலாம்.

• கணவன்-மனைவி சாப்பிட டைனிங் டேபிளில் அமர்ந்திருக்கையில், மற்றும் உறவினர்கள் நண்பர்கள் சாப்பிடும் போது, இடது கையால் சாம்பார், ரசம், மோர் பரிமாறக் கூடாது என்று ஒரு வயதான பெண்மணி கூறினார். சரிதானா?

இடது கையால் கணவன் முதலிய யாருக்கும் பரிமாறக் கூடாது. உண்ணும்போது மட்டுமல்ல, எந்த ஒரு பொருளையும் இடது கையால் யாருக்கும் கொடுக்கக் கூடாது.

அப்படிச் செய்வது தோஷத்தைத் தேடி அழைப்பது போலாகும்.

• 'ஆதித்ய ஹிருதயம்' தமிழ் கேசட் வாங்கியுள்ளேன். எப்போது எப்படிக் கேட்க வேண்டும்?

காலையில் நீராடியபின் நெற்றிக்குத் (உங்கள் ஆசாரப்படி) திலகம் தரித்து பக்தியுடன் கேட்டு வரவும்.

• அரசும்வேம்பும் சேர்ந்த மரத்தினை அமாவாசை அன்றும், திங்கள், சனிக்கிழமைகளில் மட்டும்தான் சுற்றி வர வேண்டுமென்கிறார்கள்.

எல்லாக் கிழமைகளிலும் அம் மரத்தைச் சுற்றி வரலாமா?

அரசமரப் பிரதட்சணம் தினமும் செய்யலாம். திங்கட்கிழமையும், அமாவாசை நாட்களும் விசேஷப் பலனளிப்பவை.

• கிருஷ்ணன் புல்லாங்குழல் ஊதும் கிருஷ்ணன் படங்களை, விக்கிரகங்களை வைத்துக் கொள்ளக் கூடாதா?

பூஜைகளுக்குத்தான் வைத்துக் கொள்ளக் கூடாது. கிருஷ்ணனுடன் பசுக்களோ, கோபிகளோ இருந்தால் பாதகமில்லை.

• நான் கடந்த மூன்று ஆண்டுகளாகத்தொடர்ந்து 'ஓம் நமச்சிவாய' என்ற சிவ நாமத்தை நோட்டில் 108 தடவை எழுதி வருகிறேன். நான் நினைத்தது நிறைவேறும்வரை தினமும் எழுதத் தொடங்கியுள்ளேன்.

இன்றுவரை நினைத்தது நடக்கவில்லை. நிறைவேறுமா? 'ஓம் நமச்சிவாயா', 'ஓம் சிவாய நம' இவற்றில் எந்த நாமம் சரியானது?

எண்ணிய எண்ணம் நிறைவேறும். ஆனால் நீங்கள் நாமஜபத்தை நிறைவேறும் வரை எழுதி வரவேண்டும். 'சிவாயநம:' என்று எழுதி வந்தால் போதுமானது.

• ஸ்ரீஸூக்தம் தோத்திரம் என் போன்ற சுமங்கலிகள் படிக்கலமா? எந்த நேரத்தில் படிக்க வேண்டும்?

சுமங்கலிகள் வீட்டில் மாலையில் தீபம் ஏற்றிய வுடன் ஸ்ரீலக்ஷ்மி தோத்திரம் படிக்கலாம். நித்ய மங்களம் பெருகிவரும்.

❋ 'ஜனக் கல்யாண்' அமைப்பில் பெண்கள் சேர வேண்டுமானால், எந்த முகவரிக்குக் கடிதம் எழுத வேண்டும்?

நெ. 2, அலர்மேலு மங்காபுரம்,
மயிலாப்பூர்,
சென்னை-600 004. என்ற முகவரிக்கு எழுதவும்.

❋ என் கணவரின் சகோதரி சென்ற மாதம் காலமானார்கள். நானும், கணவரும் குழந்தைகளும் இப்போது திருப்பதிக்குச் சென்று வரலாமா?

கூடாது.

❋ பெண்கள் இளம் வயதிலேயே உலகப் பற்றற்று துறவியாக விரும்பினால், பெண்களுக்கான ஆசிரமங் கள் இருக்கின்றனவா? இருப்பின் முகவரிகள் கூறி னால் மிக உதவியாக இருக்கும்?

1. கன்னியாகுமரியில் ஏற்படுத்தி உள்ள விவேகானந்த கேந்திரத்துடன் தொடர்பு கொள்ளவும்.

2. நிர்மலா தேஷ்பாண்டே,
(புதுடில்லி)
C/o. காதி கிராமோத்யோக் பவன்
சர்வோதய சங்கம்,
அண்ணாசாலை, சென்னை-2.

❋ நான் ஒரு கிருஷ்ண பக்தை. கடந்த இரண்டு வருடங்களுக்கும் மேல் 'பாதுகா தோத்திரம்' சொல்லி வழிபட்டு வருகிறேன். சில—ஏன் பல சமயங்களில் மனம்

ஒருமைப்படாமல் சஞ்சலம் அடைகிறேன். இது தவறு தானே? மனம் ஒன்றி வழிபட வழி கூறுங்கள். 'பாதுகா தோத்திரம்' என்ன பலனைத் தரும்?

தவறைத் திருத்திக் கொள்ளலாம். ஸ்ரீகிருஷ்ண பகவான் படம் வைத்து வழிபட்டால் திருவடிகளில் பார்வையைச் செலுத்துவதால் மனம் ஒருமைப்படும். 'பாதுகா தோத்திரம்' வேண்டியதையெல்லாம் தரும்!

• மிகச் சிறப்பாகச் சொல்லிக் கொண்டாடும் 'சித்ரா பௌர்ணமி' விரதத்தை வயதானவர்கள் மட்டுமே அனுஷ்டிக்க வேண்டுமா? உப்பின்றி ஒரு வேளை உணவுடன் வயதில் சிறியவளான நானும் விரதம் இருக்கலாமா?

'சித்ரா பௌர்ணமி' விரதம் பற்றிப் புத்தகமே உண்டு. ஆண்-பெண் இருவருமே விரதம் அனுஷ்டிக்கலாம். இளம் வயதிலும் விரதம் மேற்கொள்ளலாம்.

• 'ஆதித்ய ஹிருதயம்' எப்படிச் சொல்லி வழிபட வேண்டும்? நியமங்கள் என்ன?

காலை எழுந்து தேக சுத்தம் செய்து கொண்டு, நீராடி தூய வஸ்திரம் அணியவும். நெற்றித் திலகமுடன் கிழக்கு முகமாக சூரியன் முன் நின்று அல்லது அமர்ந்து கொண்டு, 'ஆதித்ய ஹிருதயம்' தோத்திரம் சொல்ல வேண்டும்.

உடல் ஆரோக்கியம் கிட்டும். மனம் புத்துணர்ச்சி பெறும்.

* என் கணவருக்கும் எனக்கும் ஏற்பட்ட சிறு சச்சரவுபெரிய விபரீதமாக முடிந்தது... கோப உணர்ச்சி

வசப்பட்டு கணவர் கட்டிய மாங்கல்யத்தைக் கழற்றி அவரிடமசேர்த்தேன்.

பிறகு, மனம் திருந்தி சில நிமிடங்களில் அதே தாலியைக் கணவரிடம் வாங்கி அணிந்து கொண்டு விட்டேன்.

ஆனாலும் அந்தச் சம்பவம் நடந்த பிறகு இரண்டு வருடங்களாகப் படும் துன்பம் கொஞ்சநஞ்ச மல்ல, தாள முடியாதது. இதற்கு உடனே பரிகாரம் கண்ணா மல்க வேண்டுகிறேன். இந்த அபலைக்கு நல்வாழ்வு அளிக்கவும்.

நடந்ததை இருவரும் மறந்து விடவேண்டும். இப்போது இப்படிச் செய்யுங்கள்.

ஒரு வெள்ளிக்கிழமை அல்லது பௌர்ணமி நாளில் இராகு காலம் இல்லாத நேரத்தில், நல்ல யோக நாள் பார்த்துக் கொள்ளவும். வீட்டில் கடவுள் படத்திற்கு முன்னால் அமர்ந்து, கணவரிடம் அன்புடன் தாலியைக் கொடுத்துப் பிறகு, வாங்கிக் கட்டிக் கொள்ளவும்.

இருவருமே ஆண்டவனை நமஸ்கரித்து 'இனி இப்படி நேராமல்' இருக்க உறுதி எடுத்துக் கொள்க.

புது நம்பிக்கையுடன் கடமையைச் செய்தால், கஷ்டங்கள் விலகிவிடும். 'புது வாழ்வு வரும்'.

* சபரிமலை ஸ்ரீஐயப்பன் படத்தை வீட்டில் வைத்துத் தினமும் வழிபடலாமா?

வைத்துக் கொள்ளலாம்; வழிபடலாம்.

* பித்ருக்கள் சாபம் என்கிறார்களே, அது எவ்வாறு ஏற்படுகிறது? அதற்குப் பரிகாரம் என்ன?

தர்ப்பணம், சிரார்த்தம் முதலான பித்ரு கர்மாக்களைச் செய்யாமல் விட்டுவிடுவதால், தோஷம் ஏற்படுகிறது. இதைத்தான் பித்ரு சாபம் என்கிறார்கள். கர்மாக்களை ஒழுங்குடன் செய்வதே சிறந்த பரிகாரம்.

• கடவுளுக்கு முடி காணிக்கை செலுத்துவதற்கு (முக்கிய) மூல காரணம் எது? முடி காணிக்கைக்கு ஏதேனும் முக்கியத்துவம் உண்டா?

பிரார்த்தனைகள் பல இருக்கின்றன. தலையால் கடவுளை வணங்குவது உயரிய வழிபாடு.
வீட்டுக்கு, சமூகத்துக்குத் 'தலைவன்' என்கிறோம் உயர்ந்த அந்தஸ்து மரியாதைக்கு உரியவர் என்பதால் 'தலை'வர் பட்டம்.
தலை-உயரிய இடம்-தேகத்தில்
பெரிய பிரார்த்தனைக்காகவே முடிகாணிக்கை செலுத்துவது.

குழந்தைகளுக்குத் தலை முடி பிரார்த்தனை- குழந்தை நல்லபடியாக வளர,வாழ முடி காணிக்கை பெற்றோர் செலுத்துகிறார்கள்.

தலையைப் பகவானுக்குக் கொடுப்பதற்குப் பதிலாகத்தான், தலைமுடியைக் காணிக்கையாகக் கொடுக்கும் வழக்கம் ஏற்பட்டிருக்கிறது.

• எங்கள் வீட்டில் ஸ்ரீ ஜெய ஹனுமான் படம் வைத்திருக்கிறோம். வீட்டில் ஆசாரம் குறைவு என எண்ணுகிறோம். ஸ்ரீஜெய ஹனுமான் படத்தை ஏதேனும் ஆலயத்தில் சேர்த்துவிடலாமா?

அதிகமான ஆசாரம் முதலியன படத்திற்குத் தேவையில்லை. படத்தை வீட்டிலேயே வைத்துக் கொள்ளலாம்.

• ஒருவரை வணங்கி எழுந்தபோது இடது கரத்தால் ஆசி வழங்கினார். வலது கரத்தில் 'அக்னி' இருப்பதால் ஆசி வழங்குவதில்லை. ஆசி இடது கரத்தால் வழங்க வேண்டும் என்றே சொன்னார். விளக்கம் வேண்டுகிறேன்?

வலது கரத்தால் ஆசீர்வாதம் செய்வது உத்தமம். இடது கரத்தால் ஆசியளித்தல் மத்யமம்.

• சில திருமணக் கூடங்களில், வீடுகளில்கூட 'ஸ்டிக்கர்' கோலம் இடம்பெறுகிறதே. இது சரியானதா?

கோலம் போடுவது மங்களகரமானது. வீடு அல்லது திருமணக்கூடம் எதுவாகினும் சரி அரிசிமாக் கோலம் போட வேண்டும்.

திருமண வீடுகளில் கலையாமல் இருக்க மாக்கரைத்த கோலம் போடுவார்கள். இது நடை முறையில் உள்ள வழக்கம்.

• சிலர் வீடுகளின் முன்பக்கம் துளசி மாடம் கட்டி துளசி வளர்க்கிறார்கள். முன் பக்கம் மாடம். கட்டலாமா?

வீட்டின் முன்னால் துளசிச்செடி வளர்ப்பது (ப) மங்கலகரமானது. சில சிற்றூர்களிலும் பல கிராமங்களிலும் வீட்டில் நடுமுற்றத்தில் துளசி மாடம் கட்டியிருப்பார்கள். மாலையில் விளக்கேற்றி வைத்து, துளசியை அம்மனாகக் கருதி வழிபட்டு மாடத்தைச் சுற்றி வந்து பெண்கள் நமஸ்கரிப் பார்கள்.

சுமங்கலிகள் தினசரி காலை நேரத்தில் துளசி பூஜை செய்வது கணவன் ஆயுளை வளர்க்க உதவி யாக இருக்கும்.

• தாயையும், தந்தையையும் தெய்வத்தோடு ஒப்பிட்டுக் கூறுவதேன்? உண்மையான விளக்கம் எதுவென அறியலாமா?

மனிதப் பிறவி எடுக்கக் காரணம் யார்? நம்மைப் பெற்ற தாயும் - தந்தையும். பிறவியிலிருந்து பாலூட்டி சீராட்டி உணவு ஊட்டி வளர்த்து கண்ணைப்போலக் காப்பாற்றி நடமாட வைக்கும் தாயையும், தந்தையையும் தெய்வமெனப் போற்ற வேண்டும். தொண்டு செய்ய வேண்டும்.

அதாவது தெய்வத்தை உயர்ந்த நிலையில் நோக்கி, நினைத்து வழிபடுவது போல பெற்றோரையும் நினைக்க வேண்டும்.

தெய்வத்துக்கு அபிஷேக அர்ச்சனைகள் உண்டு. பெற்றோருக்குச் செய்யப்படுவதில்லை.

ஆனாலும், நம் பிறவிக்குக் காரணமானவர்களைத் தெய்வத்துக்கு நிகராக மதிக்க வேண்டும்.

• கோவில்களில் மூல விக்ரகங்களைப் புகைப்படம் எடுக்க அனுமதிப்பதில்லையே, ஏன்?

ஆலயங்களிலுள்ள மூலவிக்ரகங்களைப் போட்டோ எடுக்கக் கூடாது. கருவறை மூலவர்களை போட்டோ எடுப்பதன் மூலம் அனாச்சாரம் ஏற்பட இதன் காரணமாகத்தான் 'பிளாஷ்' போட்டு போட்டோ எடுக்க எங்கும் அனுமதிப்பதில்லை.

பெரும்பாலான ஆலயங்களில் காமிராவுடன் உள்புறம் செல்லவும் அனுமதிப்பதில்லை.

• இரவில் தூங்கும்போது கெட்ட கனவுகள் வருகின்றன. இப்படிக் கெட்டகனவுகள் வராமல் இருக்க நான் என்ன செய்ய வேண்டும்?

இரவில் கெட்ட கனவுகள் (துர் சொப்பனம் வராமல் இருக்க, பின்வரும் தோத்திரத்தை மனப் பாடம் செய்க.

"அச்யுதம் கேசவம் விஷ்ணும் ஹரிம்;
ஸோமம் ஜனார்த்தனம் ஹம்ஸம்;
நாராயணம் க்ருஷ்ணம் ஜயேத்
துர்ஸ்வப்பன சாந்தயே."

இப்படி படுக்கையில் அமர்ந்து கூறிவிட்டுத் தூங்கவும்.

• என் வீட்டில் விக்ரகங்கள் இருக்கின்றன. திருமண வயதுக்கு வந்துவிட்ட பெண்களும் இருக்கிறார்கள். விக்ரகங்களுக்குப் பெண்களைப் பூஜை செய்யச் சொல்லலாமா?

ஆண்கள் இருக்கும்போது கன்னிப் பெண்கள் விக்கிர பூஜையில் அமரக் கூடாது.

• காயத்திரி மந்திரத்தைப் பஸ்ஸில் பயணம் செய்யும்போதும், ரெயிலில் பயணம் செய்யும்போதும் சொல்லிக் கொண்டிருக்கலாமா?

கூடாது.

• சிலர் ஜாதகங்களிலுள்ள தோஷங்களைக் களைவதற்கு இப்படிச் செய்கிறார்கள். அம்மன் ஆலயங்களுக்கு வெள்ளி, செவ்வாய், இரண்டு நாட்களும், சனிக்கிழமைகளில் வைணவ ஆலயங்களுக்கும் செல்கிறார்கள். இதில் மனநிம்மதி அடைகிறார்களாம். இப்படிக் கிழமைகளைத் தேர்ந்தெடுக்கலாமா?

இது அவரவர்கள் நம்பிக்கையில் உள்ள வழிபாட்டு நாட்களாக இருக்கலாம்.

இந்து மதத்தில் பொதுவாக ஒவ்வொரு நாளுக்கும் சில சிறப்புக்கள், வழிபாடுகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவையாவன :

ஞாயிறு—சூரிய வழிபாடு
திங்கள்—சிவாலய வழிபாடு
செவ்வாய்—முருகன் வழிபாடு
புதன்-சனி—பெருமாள் வழிபாடு
வியாழன்—நவக்கிரகங்கள் வழிபாடு
வெள்ளி—அம்பாள் வழிபாடு.

இப்படி நாள்தோறும் வழிபாடு செய்வது விசேஷமாகும்.

* ஸ்ரீ ஆசார்ய சுவாமிகளுக்கு என் சந்தேகத்தைத் தீர்த்தருள் புரிய வேண்டும் என்ற கோரிக்கையைப் பணிவுடன் சமர்ப்பிக்கிறேன்.

நான் வெகு நாட்களாக 'சஷ்டி கவசம்' மாலையில் விளக்கேற்றி சொல்லி வருகின்றேன். இப்படி நான் சஷ்டி கவசம்' பாராயணம் பண்ணி வந்தால் மனதில் அமைதி ஏற்படாது; ஆத்திரம் வரும் என்று சிலர் சொன்னார்கள்.

இவர்கள் சொல்லுவது உண்மைதானா...? ஸ்ரீ முருகனை எந்தப் பாடல் மூலம் பாராயணம் செய்ய வேண்டும்...?

சஷ்டி கவசம் நீங்கள் பாராயணம் செய்வதில் எந்தத் தவறும் இல்லை. மனத்திற்குச் சந்தேகம் கொடுத்து விட்டதைக் களைந்து. ஸ்ரீ முருகன் மீது கந்தர் சஷ்டி கவசம் பாராயணம் செய்து வருக...நன்மைகள் பெருகும்.

* திருமணமாகி 12 வருடங்கள் ஆகிறது. ராமேஸ்வரம், கன்னியாகுமரி, திருச்செந்தூர், பழனி, திருப்பதி- இப்படிப் பல புண்ணிய க்ஷேத்திரங்கள் சென்று வந்தோம். குழந்தை பாக்கியமின்றி, எனக்குப் பைத்தியம் பிடிக்கும் போலிருக்கிறது. கருணை கூர்ந்து நல்வழி கூறுங்கள்?

நீங்கள் பக்தி சிரத்தையுடன் இறைவனை வழிபடுவதை நம்பிக்கையுடன் தொடரவும். க்ஷேத்ராடனம் நன்மை தரும். நிச்சயம் விரும்பிய பலன் கிடைக்கும்.

பூர்வ புண்ணியத்தால் சிலருக்கு உடனே பலன் கிடைக்கும்; சிலருக்குத் தாமதமாகக் கிடைக்கும்.

வியாதி தீரும்வரை மருந்து சாப்பிடத் தானே வேண்டும்.

அதுபோல உங்கள் விருப்பம் நிறைவேறும் வரை தெய்வத்திடம் நம்பிக்கை வைத்து வழிபடவும். புத்திர பாக்கியம் கிட்டும்.

* என் கணவர் வீட்டில் இருக்கையில் தினமும் காயத்ரி மந்திர ஜபம் செய்வதுண்டு. வெளியே மோட்டார் சைக்கிளில் செல்லும்போது, ஸ்ரீ காயத்ரி மந்திரம் சொல்லாமா, கூடாதா என்ற சந்தேகம். நீங்கள்தான் அவருக்குச் சந்தேகம் தீர்த்து ஆசிமொழி கூறுங்கள்.

தினமும் காயத்ரி ஜபம் செய்வது கேட்டு சந்தோஷப் படுகிறேன். ஆனால் அந்த மந்திரத்தைச் சுத்தமான இடத்தில் அமர்ந்து ஜபிக்க வேண்டும். அதுதான் முறையும்கூட.

* கடன் இல்லாமல் கால் வயிறு சாப்பாடும், குடியிருக்க சொந்த வீடும்போதும். இது இரண்டும்

இல்லாமல் மனச்சஞ்சலம் தொடர்கிறது. நாங்கள் நல்ல படியாகவாழும் வழி என்ன...?

ஆழ்ந்த பக்தியுடன், கடவுளைத் தவறாமல் வழி படவும். எல்லா நலன்களும் கிடைக்கக் கடவுள் ஒருவழி காட்டுவார்.

* என் கணவருக்கு இப்போது சனிதோஷம் பிடித்திருக்கிறது. சனி பகவான் எங்களை ரொம்பவும் கஷ்டப்படுத்துகிறார்.

எங்கள் ஊரில் முருகன் கோவில்தான் உண்டு. நவக்கிரக சன்னிதி இல்லை.

சனியின் தோஷம் நீங்க என்ன செய்ய வேண்டும்?

சனி தோஷம் நீங்க, நவக்கிரகம் உள்ள ஆலயத்தைத் தேடிச்சென்று தரிசிக்கவும். நவக்கிரகம் சன்னிதியில் தீபம் ஏற்றி, நவக்கிரகங்களை வலம் வந்து தியானம் செய்யவும்.

நவக்கிரக தோத்திரங்களைத் தினமும் படித்து வாருங்கள். நன்மை பெருகும்.

* 'விதி வலியது. அந்த விதியையும் மதியால் வெல்லலாம்' என்கிறார்கள்.

இன்னொரு சாரார், 'அந்த மதியை அழைத்துச் செல்வதும் விதியே' என்கிறார்கள்.

இதில் எது சரி...?

விதி வலிமை படைத்ததுதான். விதிப் பயனுக்கு அஞ்சத்தேவையில்லை என்பதற்குத்தான் 'மதியால் வெல்லலாம்' என்று கூறப்படுவது.

அதாவது நமக்கு ஆண்டவன் அளித்திருக்கும் புத்தியை நல்ல நடத்தையுடன், நல்ல வழியில் செலுத்துவதன் மூலம், இனிவரும் கேடுகளைத் தவிர்க்கலாம் என்று பொருள் கொள்ள வேண்டும்.

• ஆண்கள் பூஜை அறையில் விளக்குகளை அணைக்கக்கூடாது என்று சொல்வதைக் கேட்டேன். வீட்டில் பெண் குழந்தைகள் இல்லை. குடும்பத் தலைவி வீட்டில் விலகி இருக்கும் நாட்களில் ஆண்கள் தானே சுவாமிக்கு விளக்கு ஏற்றவும், அணைக்கவும் வேண்டும் ... ? என் சந்தேகத்தைத் தீர்க்க வேண்டுகிறேன்?

பூஜை அறையிலோ, சுவாமி படத்தின் முன்னாலோ ஆண்கள் விளக்கு ஏற்றக் கூடாது, அணைக்கக் கூடாது என்று விதிகள் எங்கும் விதிக்கப்படவில்லை.

ஆண் இப்படிப்பட்ட நேரங்களில் பூஜை அறையில் விளக்கு ஏற்றலாம்.

• நான் இந்து மதப்பற்றுள்ளவள். மூன்றுகுழந்தைகளுக்குத் தாய். கணபதி, ஈஸ்வரன், திருமால், முருகன், லக்ஷ்மியைத் தினமும் பூஜை செய்யவும், கடவுளை வழிபடும முறைகளையும் அறிய விரும்புகிறேன்.

அதற்குரிய புத்தகங்கள் எங்கே கிடைக்கும்...?

'பூஜா கல்பம்' என்ற புத்தகத்தை வாங்கி, அதில் கூறப்பட்டுள்ளபடி பூஜைகளைச் செய்யவும். இது போல பல பக்திப் புத்தகங்கள் ஸ்ரீ எம். எஸ். அருணாசலம், பவானி புக் செண்டர், 19 ஸ்டேஷன் ரோடு மேற்கு மாம்பலம், சென்னை-33 விலாசத்திற்கு எழுதினால் பெறலாம்.

• எனக்குக் கனவில் அடிக்கடி பிள்ளையார், முருகன் அபிஷேகம், கருமாரி அம்மன் தரிசனம் ஸ்ரீனிவாசன் தரிசனம் தோன்றுகிறது. இதனால் நன்மையா தீமையா...?

இரவில் சொப்பனத்தில் நீங்கள் காணும் தெய்வங்களைக் காண்பதால், எந்தத் தீங்கும் வந்துவிடாது. தீமை வருமா என்ற சந்தேகமே வேண்டாம்!

• மனித ஆன்மாவின் உள்ளே மனசு சித்தம் இவை, எந்த இடத்தில் உடலில் இடம் பெற்றுள்ளன?

மனசு, சித்தம் (சிந்தை) ஆகியவை மார்பு பக்கத்தில் உள்ளன.

• ஸ்ரீந்ருசிம்மருடைய படத்தை வீட்டில் பூஜை செய்வதோ, அவருடைய தோத்திரங்களைச் சொல்லுவதோ கூடாது என்று என் வீட்டார் கூறுகிறார்கள். இது சரிதானா?

ஸ்ரீந்ருசிம்மர் படத்தை பூஜையில் வைத்துக் கொள்ளலாம்; தோத்திரங்கள் சொல்லலாம். பூஜைகள் கிரமமாக நடத்தப்பட வேண்டுவது அவசியமானது.

• என் திருமணத்துக்குப் பிறந்த வீட்டார் செய்து கொடுத்து அணிந்திருந்த திருமாங்கல்யம் தங்கச் சங்கிலியுடன் தொலைந்து விட்டது.

இப்போது கணவன் வீட்டார் செய்து போட்ட திருமாங்கல்யம் மட்டுமே உள்ளது. ஒரே திருமாங்கல்யத்துடன் இருக்கலாமா? இன்னொன்று செய்து அணிய வேண்டுமா? மனம் வேதனைப் படுகிறது; நிவர்த்திக்கவும்.

ஒரே திருமாங்கல்யமுடன் இருக்கலாம். இரண்டாவது திருமாங்கல்யம் போட்டுக் கொள்ள வேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லை. அறுபதாண்டில் இன்னொன்று செய்து கட்டிக் கொள்ளலாம். இதற்காக நீங்கள் மன வேதனைப்பட வேண்டாம்.

• நெய், நல்லெண்ணெய், விளக்கெண்ணெய், இலுப்ப எண்ணெய், தேங்காய் எண்ணெய் இந்த ஐந்தும் சம அளவில் கலந்து வீடுகளில் ஏற்றலாமா? ஆலயங்களில் மட்டும் ஐந்தெண்ணெய் விளக்கு ஏற்றப் பட வேண்டுமா?

வீடுகளில் நெய், நல்லெண்ணெய், விளக்கெண்ணெய், இலுப்ப எண்ணெய் இந்நான்கையும் கொண்டு தனித்தனியாகத் தீபம் ஏற்ற வேண்டும்.

தேங்காய் எண்ணெயை விளக்குக்கு உபயோகப் படுத்தக் கூடாது.

ஆலயங்களில் உள்ள தீபங்களுக்கு இலுப்ப எண்ணெய் சிறந்தது.

• எங்கள் குடும்பத்தில் என் மாமியாரிடம் குல தெய்வம் எது என்று கேட்டேன்.

வைத்தீரஸ்வரன் கோயில், திருப்பதி வேங்கடா ஜலபதி, வீராம்பட்டணம் செங்கழுநீர் அம்மன், பெரியாண்டவர் என்று சொல்லிவிட்டார். கும்பிட வேண்டிய குறிப்பிட்ட குலதெய்வம் எது என்று தெரிய வில்லை.

எப்படி நான் வழிபாடு பிரார்த்தனைகளை நிறை வேற்றுவது?

எந்த அம்மனையும் வீட்டின் தெய்வமாக வைத்து வழிபடலாம். திருப்பதி வேங்கடாஜலபதி பெருமாளும் அம்பாள் (சக்தி) அம்சம் உடையவர். அவரையும் வழிபட்டு வரலாம்.

வீட்டுக்குப் பெரியவர்கள் புது மருமகள்களுக்கு முதலில் குலதெய்வம் எந்த தெய்வம் என்பதனையும

பிராத்தனைகள் நிறைவேற்றும் முறைகளையும் தெரிவிக்க வேண்டியது அவசியம்.

* குடும்பத்தில் கடன் தொல்லை நீங்காமல் பாரமாக அழுத்துகிறது. பணக் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. வறுமைத் தொல்லைகள்.

வீட்டில் செல்வம் பெருகி, குடும்பக் கடன்கள் நீங்கி சுபிட்சமாக வாழ ஒரு வழி கூறுங்கள்?

உங்கள்குறைகள் நீங்கி,செல்வம் வந்திடத் தினமும் ஸ்ரீமகாலக்ஷ்மியைத் ஸ்தோத்திரம் செய்யவும். இந்தப் பாராயணம் மிகவும் நன்மை தரும். ஆதிசங்கரரின் கனகதாரா ஸ்தோத்திரம், பொன்மழையைத் தந்தது. பலர் பாராயணம் செய்து பயன் பெற்று வருகிறார்கள்.

* காலையில் நீராடிவிட்டு 'ஸ்ரீராமஜயம்' எழுதுகிறேன். பின்னர் மாலையில் அலுவலகம் திரும்பி வந்து, குளிக்காமல், ஸ்ரீராமஜயம்' எழுதி வரலாமா?

ஸ்னானம் செய்து ஸ்ரீராமஜெயம் எழுதுவது போல, மாலையில் எழுதலாம். அப்போது மறுபடி ஸ்னானம் செய்ய வேண்டுமென்ற அவசியமல்ல.

* சில சமயம் பூஜையின்போது நைவைத்தியம் செய்ய முடியாமல் போகிறது. பழங்களும் கிடைப்பதில்லை. கற்பூர ஆரத்தி மட்டும் காட்டிப் பூஜையை முடிக்கலாமா?

ஸ்தோத்திரங்கள்கூறி, கற்பூரம்ஏற்றிச் சுருக்கமாகப் பூஜையை முடிக்கலாம். ஆனால் பக்தி மட்டும் முழுதுமாக இருக்க வேண்டும்.

• அதிகாலையில் எழுந்தாலும் தண்ணீர் கிடைக்கத் தாமதமாகிறது. அப்போது திருநீறு குளிக்காமல் இட்டுக் கொண்டு பாடங்கள் படிக்கலாமா?

அதிகாலையில் குளிக்காமல் திருநீறு இட்டுக் கொள்ளலாம். பிறகு பாடம் படிக்கலாம். ஆனால் சைவர்களைப் போல வைணவர்கள் திருமண் இட்டுக் கொள்ளக் கூடாது.

கழனிகளுக்கு அதிகாலையில் மாடுகள் ஓட்டிச் செல்லும் உழவுப்பெருங்குடி மக்கள் நெற்றியில் திருநீற்றுக் கோடுடன் செல்வார்கள்.

• குத்து விளக்கில் ஐந்து முகங்களையும் திரி போட்டு தீபம் ஏற்றி வழிபடுவது போல, இரண்டு முகத்தில் அல்லது ஒரு முகத்தில் திரி போட்டுத் தீப மேற்றுவதில், எது சாலச் சிறந்தது...? ஐந்து முகமும் அவசியம் ஏற்றப்பட வேண்டுமா......?

குத்து விளக்கில் ஐந்து முகமும் ஏற்றி வழிபடலாம். சுப மங்கள நிகழ்ச்சிக்கு முக்கிய இடத்தில் இப்படி ஏற்றியும் வைக்கலாம்.

ஐந்து முகங்களும் ஏற்றத்தான் வேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

• கோயிலில் புகுந்து விக்கிரகங்கள், நகைகளைத் திருடுகிறார்கள்... இந்தக் கொள்ளையை எப்படித் தடுப்பது? அவர்களுக்கு எப்படித் தண்டனை தருவது?

எதையும் திருடலாகாது. அது பெரும் குற்றமாகும். அதிலும் கோயிலில் புகுந்து கொள்ளையடிப்பது யாராக இருந்தாலும் நீதிமன்றத்தின் மூலம் தண்டிக்கப்பட வேண்டியவர்களே!

ஒருக்கால் இங்கு தப்பித்துக் கொண்டாலும் பெரும் துன்பத்தை அவர்கள் (திருடர்கள்) அநுபவித்தே தீர வேண்டும்.

* சைவம், வைணவம் என்ற இரு பிரிவும் மறைந்து ஒற்றுமையாக ஒரு புதிய இந்து சமுதாயம் உருவாகுமா?

இந்து மதத்திற்கு இரு கண்கள் சைவமும், வைணவமும். கண்களுக்குள் வேற்றுமை பார்ப்பது தவறு. இரு கண்களும் சரியாக வளர்ந்தால்தான், உடல் அழகாக விளங்கும்.

அதே போல சைவமும் வைணவமும் நன்றாக, ஒன்றாக வளர்ந்தால்தான் இந்து சமூகம் மேலும் வளர்ச்சி பெற்றுச் சிறந்து விளங்கும்.

* தசாவதாரத்தில் பகவான் கல்கியாக அவதரிப்பார் என்று சொல்லப்படுகிறது. அந்தப் பகவான் எங்கே அவதரிக்கப் போகிறார்? எப்போது பிறப்பார்?

இது கலியுகம். இந்த யுகத்தின் முடிவில், திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிர வருணி நதி தீரத்தில் பகவான் 'கல்கி' அவதாரமாகப் பிறப்பார். இவ்வாறு அறியப்படுகிறது.

* நம்மைப் படைத்த இறைவனுக்கு முதலிடம் கொடுக்காமல், மாதா, பிதா, குரு, தெய்வம் என்று வரிசையிட்டு வணங்கச் சொல்வது சரிதானா?

சரியானதே! நாம் இறைவனிடம் பக்தி செலுத்துவதற்கே பிறந்துள்ளோம். பிறந்த காரணமும் அதுவே. அத்தகைய பிறப்பினை அளித்தவர்களை முதலில் தெய்வமாக வணங்க வேண்டும். பின்னரே தெய்வத்தை நாட வேண்டும்.

  

• எந்த ஊர் ஆலயத்துக்குள் சென்றாலும், எல்லா ஆலயங்களிலும், முகப்பில் கஜலக்ஷ்மி இரு யானைகள் அமிர்த குடம் ஏந்தி லட்சுமிக்கு அபிஷேகம் செய்யும் நிலை) சிலையை வைத்திருக்கிறார்களே. என்ன காரணம்?

இது மிக முக்கியமான கேள்வி. விளக்கமான பதில் சொல்கிறோம். இருமருங்கும் தீப ஜோதிகள் ஒளிவிடும் தெய்வ சன்னிதானம், ஸ்ரீ லட்சுமி வாசம் செய்யுமிடம். பார்க்கும்போதே மங்களம் அளிக்கக்கூடியதும், நாடி வரும் பக்தர்கள் விரும்பும் வரங்களை அளிக்கவும் கூடிய ஆதார சக்தியாக விளங்குகிறாள் ஸ்ரீ மகாலக்ஷ்மி. அதனால்தான் ஆலயங்களில், மண்டப முகப்பில், சந்நதிகளில் ஸ்ரீ கஜலக்ஷ்மி சிலை வைக்கப்பட்டிருக்கிறது.

• சில வருடங்களுக்கு முன்பு ஒரு பிள்ளையார் சிலைக்குத் தினமும் பூஜைசெய்து வந்தேன். இப்போது வேறு இடம் மாற்றலாகி வந்து விட்டேன். அதேபோல வேறொரு பிள்ளையார் சிலை வாங்கி பூஜை செய்யலாமா? விதிமுறைகளைக் கூறுங்கள்?

வேறு பிள்ளையார் சிலைக்குப் பூஜை செய்யலாம். தொடங்கிய செயலை இடையில் நிறுத்தாமல் வாழ்நாள் முழுவதும் செய்து வருவது நல்லது. இது தலையான செயலாகும்.

• சனிக்கிழமை தோறும் சிலர் விரதம் அனுஷ்டிக்கிறார்கள். இதனால் என்ன நன்மை கிடைக்கும்?

விரதம் இருப்பது ஒரு வைராக்கிய முயற்சி. 'உண்ணாமை' விரதம் இருப்பதால் உடலுக்கு

ஆரோக்கியம் கிடைக்கிறது. இதனால் உள்ளத்திற்கு அமைதி கிடைக்கிறது. விரதத்தால் இந்த இரு நன்மைகளும் நமக்குக் கிடைக்கும்.

• 'அன்று' எழுதியவன் எழுத்தை அழித்தா எழுத முடியும்?' என்கிறார்களே? அப்படியானால் இறைவனைவிட விதி வலிமையா? தங்களிடம் விளக்கம் வேண்டுகிறேன்?

விதி வலிமை மிக்கதுதான். ஆனால் இறைவன் அருளால் அந்த விதியின் வலிமையைக் குறைத்து விட முடியும்.

இதைத்தான் திருஞான சம்பந்தர் கோளாறு பதிகம் மூலம் பாடுகிறார்:

'வெப்பொடு குளிரும் வாதம் மிகையான
பித்தும் வினையான வந்து நலியா...'

விதியை மதியால் வெல்லலாம் என்பது தெய்வத்தைப் போற்றிப் பாடியவர்களின் பாடலைப் பாடினால் விதியின் வலிமைக்கு, குறைப்பதற்கு வழிகாணலாம் என்றே சொல்லப்பட்டது.

• மன நிம்மதி அடைய என் முயற்சிகள் பலிக்கவில்லை. பெரியவர்கள் ஒரு வழி சொல்ல வேண்டுமே?

தியானம் செய்வது, நல்ல குணங்களை மனத்தில் வளர்த்துக் கொள்வது மன நிம்மதி அளிக்கும்.

• பாரத நாட்டிலுள்ள அனைத்து இந்துக்களும் சேர்ந்து ஒற்றுமையை வளர்க்க என்னவெல்லாம் செய்ய வேண்டும்?

கூட்டு வழிபாடுகள் கோவிலில் நடைபெற வேண்டும். அருள் நூல்களைப் படித்து அதில் உள்ள

தர்மங்களை அறிந்து, செய்வதற்குப் பல நல்ல பணிகள் இருக்கின்றன. அவற்றின் மூலம் ஒற்றுமையை நாம் வளர்க்கலாம்.

* உண்மையான கடவுள் பக்தி எது?

பலனை எதிர்பாராமல் கடவுள் பணியைச் செய்வது. செய்யும் பணிகளில் உண்மையான பக்தியுடன் கடவுளின் பணியே என் ஈடுபடுவது இரண்டுமே.

• உண்மையான மகிழ்ச்சி எப்போது ஒருவனுக்குக் கிடைக்கும்?

தான் எதிர்பாராத நேரத்தில் ஒரு பொருள் கிடைத்தால் அப்போது உண்மையான மகிழ்ச்சி கிடைக்கிறது.

* ஒரு பெண்ணின் ஒரு பெருமை எதில் அடங்கி இருக்கிறது?

தன் கணவன் தன்னைப் பற்றிப் புகழும்படி உண்மையாக நடந்துகொள்ளும் வரையில் மனைவிக்குப் பெருமை கிடைக்கிறது.

• ஆண்களின் உண்மையான அழகு எது? பெண்களின் உண்மையான அழகு எது?

தன்னடக்கத்துடன் கடமை தவறாமல் இருந்து வீரமாக இருப்பது ஆண்களின் உண்மையான அழகு. வெட்கத்துடன், தன்னடக்கத்துடன் கற்பு நெறி தவறாமல் தன்னுடைய இல்லறப் பணிகளைச் செய்வது பெண்களின் உண்மையான அழகு.

• நானும் நாலு லக்கம் சம்பாதிக்கிறேன். கணவரும் என்னைவிட அதிகம சம்பாதிக்கிறார். வீட்டில் ஓயாத பிரச்னைகள். குழந்தைக்கு ஏற்ற

தாயாக, ஏற்ற கணவனாக, ஏற்ற மருமகளாக இருக்க முடியவில்லை...கண்ணீரில் சில இரவுகள் கழிகிறது... என் வாழ்க்கை நேராக அமைய வழி கூறுங்கள்...?

பொருளாதாரத்தில் மாத்திரம் வாழ்க்கை அமைந்து விடாது. பரஸ்பரம் விட்டுக்கொடுப்பதும், அனைவருடன் சௌஜன்யமாகப் பழகுவதாலும் மட்டுமே தாம்பத்ய வாழ்வில் அமைதி கிட்டும்.

* ஆலயங்களில் ஈர ஆடையுடன் சென்று வழிபடலாமா?

கூடாது.

* தாங்க முடியாத சோதனைகள் ஏற்பட, ஏற்பட 'ஸ்வாமியைக் கும்பிட வேண்டாம்' என்று தோன்றுகிறது...? இதனை எப்படிச் சமாளிப்பது?

ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம் பலரும் எனக்கு இது தான் வேண்டும், எனக்கு அதுதான் வேண்டும் என்று பிரார்த்தனைகள் செய்தார்கள்.

ஆனால் குந்திதேவி மட்டும் எனக்கு எப்போதும் கஷ்டங்களைக் கொடு கிருஷ்ணா! அப்போதுதான் எனக்குக் கடவுள் நினைப்பே இருக்கும் என்று வேண்டினாள். இக்காலத்திலும் துன்பம் மிகுதியாக இருப்பதனால்தான் அனைவரும் கடவுளை நம்பக்கூடிய சூழ்நிலை வந்திருக்கிறது!

* ஸ்ரீ சுதர்சன ஹோமம் வீட்டில் செய்வதால் என்ன நன்மை? அதில்வரும் மந்திரங்களைத் தினம் உச்சாடனம் செய்து வரலாமா?

ஸ்ரீ சுதர்சன ஹோமம் வீட்டில் செய்யலாம். நன்மைகள் சித்திக்கும். ஆனால் சுதர்சன மந்திரத்தை குரு உபதேசம் பெற்றுத்தான் ஜபம் மேற்கொள்ள வேண்டும்.

* சிறுவாச்சூர் மதுரகாளியம்மன் கோவில் உண்டியலில், பிரார்த்தனையை முன்னிட்டு என் இரண்டு திருமாங்கல்யங்களில் ஒன்றைசேர்ப்பித்தேன்.

நான்கு வருஷம் அல்லது (சஷ்டியப்தபூர்த்தி) அறுபதாண்டு கல்யாணத்தில் திருமாங்கல்யம் புதிது செய்துபோட்டுக் கொள்ள வேண்டும் என்று கூறுகிறார்கள். ஸ்ரீ குருவானவர்கள் ஆக்ஞைப்படி செய்வேன்?

சுமங்கலிகள் கழுத்தில் எப்போதும் ஒரு திருமாங்கல்யம் அணிந்தே இருக்க வேண்டும்.

இரண்டு திருமாங்கல்யங்கள் இருந்தாக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இல்லை.

இரண்டாவது திருமாங்கல்யம் அணிய விரும்பினால் (சஷ்டியப்த பூர்த்தி) அறுபதாண்டு விழாவில் போட்டுக் கொள்ளலாம்.

* வீட்டில் வில்வதளச் செடி வைத்துப் பராமரிக்கலாமா? வில்வத்தால் வீட்டில் உள்ள சிவபெருமான் படத்துக்கும், கோவிலுக்கும் கொண்டு சென்று அர்ச்சிக்கலாமா?

வில்வத்துக்குத் தனிப் 'பாத்தி' கட்டி செடி வைக்கலாம். அதன் பக்கம் துளசிச் செடியும் வைக்கலாம். வில்வதளத்தினால் பூஜை செய்யலாம்.

* வேலை நிமித்தமாக கல்கத்தா சென்று திரும்பினார் என் கணவர். அங்கு தெரிந்தவர்களிடமிருந்து ஒரு துளசி மணிமாலை எனக்காக வாங்கி வந்தார். சுமங்கலிகள் துளசிமாலை அணியக் கூடாது என்றுசில பெரியவர்கள் கூறியதால், கழற்றி விட்டேன். சுமங்கலிகள் துளசி மாலை அணியலாமா, கூடாதா?

சுமங்கலிகளும் துளசி மாலை அணியலாம்.

• எந்த வேலை செய்தாலும் முழு மனத்தோடு செய்ய முடியவில்லை. பூஜையில் அமர்ந்து தியானம் செய்தாலும் என் கவனம் வேறு பக்கம் இழுக்கிறது. சுலோகம் சொல்லுகிறேன். உதடு மட்டும் சொல்கிறது. மனசு அலை பாய்கிறது. மனம் ஓயாமல் சஞ்சலப்படு கிறது. என் மனம் அமைதி பெற, எதிலும் மனப்பூர்வ மாக ஈடுபட ஒரு வழி கூறுங்கள்?

உங்கள் இல்லத்தில் காலை, மாலை இருவேளை களிலும் சரியாக 6-00 மணிக்கு இப்படிச் செய்யுங் கள். உங்கள் இஷ்ட தேவதை-தெய்வம்—படத்தை முன்னால் வைத்துக் கொள்ளுங்கள். தீபமேற்றி வையுங்கள். மனசை ஒருமுகப்படுத்தும் முயற்சி யாகக் கடவுள் படத்தைக் கண்ணால் பார்த்துக் கொண்டிருக்கவும். அப்போதே படத்தின் உருவத்தை மனத்தில் சிறிது சிறிதாகக் காண முயற்சி செய்க. கண்களை மூடினால் அந்த உருவம் தெரிய வேண்டும்.

இதுவே மனம் அலைபாயாமல், நிம்மதி ஏற்படச் செய்யும். அநுபவத்திலே பார்க்கலாம்.

• கடந்த பத்து வருஷங்களாகத் தினமும் 'சௌந்தர்யலஹரி' நூறு பாக்களையும் சொல்லி, முடிவில் முடிந்த நைவேத்தியம் செய்துவிடுவேன். இதுவரை 1372 தடவைகள் பூர்த்தி செய்து விட்டேன்.

ஆயிரம் தடவை பூர்த்தியாகியதற்கு அம்பாளுக்கு விசேஷமாக ஏதேனும் செய்ய வேண்டுமா?

'சௌந்தர்யலஹரி' ஆயிரம் தடவை பாடி முடித்தது விசேஷம்தான். இதை முன்னிட்டு ஒரு சுமங்கலிக்குப் புடவை ரவிக்கை தேங்காய் பழம் மஞ்சள் வெற்றிலை பாக்கு தரலாம். அல்லது

கன்னிப் பெண்ணுக்குப் பாவாடை, சட்டை தேங்காய் பழம் தரலாம். இது சுபங்களைக் கொடுக்கும்.

* தினமும் பூஜையறையில் 'இருதய கமலம்' கோலம் போடுகிறேன். கோலம் போட்டுப் பேர் எழுத வேண்டுமா? ஹிருதய கமலமா? இருதய கமலமா?

பெயர்போடலாம். போடா விட்டாலும் பலன்உண்டு. ஹிருதய கமலம்-சமஸ்கிருதம். இருதய கமலம் மணிப்பிரவாளம்.

* இன்றைய சூழ்நிலையில் என் வீட்டிலுள்ள பூஜை விக்ரகங்களுக்குக் காலையில் அபிஷேகம் செய்ய முடியவில்லை. மாலையில் நீராடி அபிஷேக ஆராதனைகள் செய்யலாமா?

சாயங்காலம் ஜபம் மட்டும் செய்யலாம். உத்தமம். மாலையில் அபிஷேகம், பூஜைகள் இல்லறத்தார் செய்வது உசிதமில்லை.

* நான் பட்டதாரி. திருமணமாகிவிட்டது. அலுவலகத்தில் பணி புரிகிறேன். நல்ல கணவரை அடைந்த போதிலும் ஓராண்டாகச்சோதனைகள் பெருகி வருகின்றன. பல கொடுமைகள். கணவரை எதிர்த்து நிற்கவோ, தனியாகப் பிரிந்து செல்லவோ விருப்ப மில்லை. நல்ல வாழ்க்கை மறுபடி அமையும் என நம்பி வரும் பெண். மன ஆறுதல், வாழ்வில் மகிழ்ச்சிபெற ஒருதோத்திரம் அருள்வீரா?

''சர்வ மங்கள மாங்கல்யே
சிவே சர்வார்த்த சாதகே!
சரண்யே திரியம்பகே தேவி
கௌரி நாராயணீ நமோஸ்துதே'

இந்தத் தோத்திரத்தைச் சொல்லி வாருங்கள். விடிவு பிறக்கும்.

* 'ஸ்ரீ ராமஜயம்' ஒரு கோடி தடவை எழுதுவாக வேண்டி இருக்கிறேன். கோடி நாம ஜெபம் எழுதிய பின்பு, அந்த நோட்டுக்களை என்ன செய்ய வேண்டும்?

ஸ்ரீ ராமஜயம் ஒரு கோடி எழுதியதை, ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள், ஸ்ரீ மடம், காஞ்சிபுரத்துக்கு அனுப்பி வைக்கலாம். பிரசாதங்கள் அனுப்பி வைக்கப்படும்.

* இறைவனிடம் எதை வேண்டுமானாலும் வேண்டலாமா...?

எதையும் வேண்டலாம். ஆனால் 'எனக்கு எது இதமானதோ அதைச் செய்' என்று இறைவனிடம் வேண்டுவதுதான் உயர்ந்த பிரார்த்தனை.

* சரும நோய்களின் துன்பம் நீங்க 'ஸ்ரீ கந்தர் சஷ்டி கவசம்' பாராயணம் செய்யலாமா...?

பாராயணம் செய்யலாம். நோய் நீங்கும்.

* என் வீட்டுப் பூஜை அறையில் அம்மன் படங்கள், ஸ்ரீராமர், லட்சுமணர், சீதை, ஆஞ்சநேயர் படங்கள் இருக்கின்றன. ஒரு சிலர், ஸ்ரீ ராமர் படம் வீட்டில் இருக்கக்கூடாது என்றனர். இது சரியா, தவறா...? பெரியவர்கள் விளக்கிச் சொல்ல வேண்டும்?

ஸ்ரீ ராமர் படம் வீட்டில் பூஜை அறையில் இருப்பது மிகவும் நல்லது. பயமே வேண்டாம்.

* பெண்கள் வீட்டில் தினமும் 'கந்தர் சஷ்டி கவசம்' சொல்லலாமா...?

கந்தர் சஷ்டி கவசத்தைப் பெண்கள் தினமும் சொல்லலாம். அதனால் நன்மைகள் கிடைக்கும்.

• எங்கள் குடும்பத்தில் ஒருவர் மாற்றி ஒருவருக்கு ஏதேனும் நோய் வந்து கொண்டிருக்கிறது. டாக்டருக்கு மாதா மாதம் ஐம்பதுக்கு மேல் தவறாமல் செலவாகிறது. இந்நிலை நீங்கி அனைவரும் ஆரோக்கியத்துடன் வாழ எந்தக் கடவுளைத் தியானிக்க வேண்டும்? எந்தத் தோத்திரம் சொல்ல வேண்டும்?

உங்கள் குடும்பத்தின் இப்போதுள்ள இன்னல்கள் தீர வேண்டுமானால், ஒன்றை உடனே செய்க. அதாவது உங்கள் முன்னோர்கள் வழிபட்டு வந்த குலதெய்வத்தையே தொடர்ந்து நீங்களும் வழிபட்டு வந்தால், துன்பங்கள் தொடராது. நோய்கள் நீங்கும்

எல்லாத் தெய்வங்களுக்கும் விளக்கேற்ற, பொதுவாக எந்த எண்ணெய் உபோகிக்கத் தகுந்தது?

இலுப்ப எண்ணெய் எல்லா விளக்குக்கும், எல்லாத் தெய்வங்களுக்கும் ஏற்றது. அல்லது சுத்தமான நல்ல எண்ணெயினாலும் விளக்குகள் ஏற்றலாம். இதை ஆலய விளக்குகளிலும் சேர்ப்பிக்கலாம்.

• நான் தினமும் 'ஓம் சரவண பவ' நாமத்தை 108 தடவை எழுதி வருகிறேன். இது சரியா தவறா...என்று தெரியவில்லை. 'ஓம்' என்ற பதத்துடன் நாமாவளி கூறலாகாது என்று முன்பு பதிலளித்ததால் கேட்கிறேன். நல்வழி காட்டுங்கள்?

மந்திரத்தோடு கூடிய 'ஓம்'காரம் வரும்போது, அனைவரும் ஜபிக்கலாம். எழுதலாம். படிக்கலாம்.

• துன்பங்கள் நீங்க இறைவனை வேண்டினால், முன்வினைப்படிதான் நடக்கும் என்று கூறுவதைக் கேட்டிருக்கிறேன். நம்பிக்கை ஏற்படும்வண்ணம் தாங்கள் ஒரு பதில் கூற வேண்டுகிறேன்?

மாணிக்கவாசகர் போன்றும், அப்பர் அடிகள் போன்றும் பூரண நம்பிக்கையுடன் நாமும் இறைவனைப் பிரார்த்தனை செய்ய வேண்டும். அப்படிப்பட்ட நம்பிக்கையுடன் நாமும் பிரார்த்தனை செய்தால், முன்வினைப் பயன்கள் தீரும். சோதனைகள் மறையும்.

''கற்றுணை பூட்டிக் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயமே...''

என்று ஒருமுறை சொல்லிப் பாருங்கள்! 'நம்பிக்கை எதிரொலிக்குமே!

• எங்கள் குடும்பம் இன்று மிகவும் கஷ்டப்படுகிறது. யாரேனும் பாபம் செய்திருந்தால், அதைப் போக்குவதற்கு ஏதேனும் வழி உண்டானால் சொல்லுங்கள்...கேட்டு அதன்படி நாங்கள் நடக்கத் தயாராக இருக்கிறோம்?

'மாதா பிதா செய்த பாவம் மக்களுக்கு' என்பார்கள். கேள்விப்பட்டிருப்பீர்கள். குடும்பத்தின் கஷ்டங்கள் நீங்க, எல்லோரும் பக்தியுடன் கடவுளை வழிபடவும். ஸ்ரீ ராம நாமம் ஜபித்து வரவும். தொல்லைகள் தீரும். பாபங்கள் விலகும்.

• ஸ்ரீ காமகோடி, ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி இவ்விரு பெயர்களும் வைத்துக் கொள்வதன் காரணம்?

'காமகோடி' என்பது பீடத்தின் பெயர். 'இந்திர சரஸ்வதி' என்பது காமகோடி பீடத்தின் சிறப்புப் பெயர்.

• பெண்கள், பெண் குழந்தைகள் சௌந்தர்ய லஹரி தோத்திரம் சொல்லலாமா? சில பெரியவர்கள் சொல்லலாம் என்றும் சிலர் ஆட்சேபமும் தெரிவிக்கின்றனர்?

'சௌந்தர்யலஹரி' ஆண்கள், பெண்கள், குழந்தைகள் எல்லோரும் சொல்லலாம்.

* பூஜை அறையில் மேடை கட்டி அதன்மீது குத்துவிளக்கை எரிய விடுகிறோம். அப்படி இருந்தாலும் தாம்பாளம் மீதுதான் விளக்கை வைக்க வேண்டும் என்கிறார்கள். அப்படித்தான் குத்துவிளக்கை வைக்க வேண்டுமா?

குத்துவிளக்கை மேடைமீது வைத்தாலும் கீழே வைத்தாலும் ஆசனமாக இலை, தாம்பாளம் வைத்து வைக்க வேண்டும். அதே சமயத்தில் எண்ணெய் கீழேசிந்தாமல் இலையிலோ தாம்பாளத்திலோ விழ வாய்ப்புண்டு.

• வீட்டில் சிறியவர்கள் பெரியவர்களுக்கு நமஸ்காரம் செய்யும்போது. பெரியவர்கள் ஆசி வழங்குவதுடன் அவர்கள் கையில் இருக்கும் அட்சதையை அச்சிறியவர்களின் தலையில்போடுகிறார்கள். அவர்கள் ஆசி வழங்கியபின், நாங்கள் வீட்டில் அங்குமிங்கும் நடக்கும்போது, கீழே கிடக்கும் அட்சதைமீது எங்கள் பாதங்கள் படலாமா? அந்த அட்சதையை என்ன செய்ய வேண்டும்?

ஆசீர்வாதமாக அட்சதை பெற்றுக் கொள்ளும் போது தலையில்தான் விழும்படி இருக்க வேண்டும். அப்படி அட்சதை பூமியில் விழுந்து விட்டால் சேகரித்துக் கால் படாத இடத்தில் வைத்துவிட வேண்டும்.

• விரதம் அன்று தூங்குவது (பகலில்) தைப்பது எதுவும் கூடாது என்கிறார்களே? என்ன காரணம்?

விரதம் இருக்குமாயின் இறைவனைப்பற்றி நினைப்பு இருக்க வேண்டும். பகலில் தூங்கக் கூடாது. இறைவனையே நினைத்துக் கொள்ள வேண்டும்.

• சாயங்காலம் தீபம் ஏற்றிய உடனேயே உணவு [சாப்பாடு] சாப்பிடக் கூடாது என்று சிலர் சொல்கிறார்களே... ஏன்? தீபத்தைச் சாயங்காலம் எத்தனை மணிக்கு ஏற்ற வேண்டும்? எத்தனை மணிக்கு உணவைச் சாப்பிட வேண்டும்?

காலையிலும், மாலையிலும் அது தேவதைகளுடைய நேரம். அந்த நேரத்தில் சாப்பிடுவது, தூங்குவது கூடாது. காலை 6 மணிக்கும், மாலை 6 மணிக்கும் தீபம் ஏற்ற வேண்டும். காலை, மாலை எட்டு மணிக்குப் பிறகுதான் உணவு உட்கொள்ள வேண்டும்.

• இரண்டு மாதமாகக் காக்கை தலைமேல் அடிக்கடி மோதுகிறது. நாங்கள் 6 பேர் நன்றாக இருந்தாலும் அக்காவையே காக்கை தலைமேல் அடித்து விட்டுப் போகிறது. இதற்குப் பரிகாரம் உண்டா?

காக்கை அடிக்கடி தலையில் உட்காருவது நல்லதல்ல. ஜோஸ்யரிடம் தக்க பரிகாரம் கேட்டுக் கொள்ளவும்.

• பெண்கள் விரதம் என்னென்ன கிழமைகளில் இருக்கலாம்? கணவனை மனைவி பூஜிக்க வேண்டுமென்று சில ஆண்கள் நினைப்பது சரியா?

பெண்கள் விரதமே இருக்க வேண்டிய அவசியமில்லை. ஏகாதசியன்று மாத்திரம் விரதமிருந்தால்

போதுமானது. கணவனிடம் மனைவி மரியாதை யுடன் இருக்க வேண்டும். ஆண்கள் பெண்களை நவராத்திரி காலத்தில் மட்டும் சுவாஸினியாகப் பூஜை செய்ய வேண்டும்.

● கோவில்களில் 'மணி' கட்டிவைக்கப்பட் டிருப்பதன் (விளக்கம்) காரணம் அறிய விரும்புகிறேன். தாங்கள் கூற வேண்டும்?

அனைத்து மக்களுடைய மனத்திலும் இறைவ னுடைய நினைவு வருவதற்காக ஆலயங்களில் பெரிய மணி கட்டி ஓசை எழுப்பப்படுகிறது.

❋ வைஷ்ணவ கோவில்களில் துவார பாலகர்கள் இருப்பதன் காரணம் என்ன?

கோவில்களில் இருக்கும் கொடி மரங்கள் எதை உணர்த்துகின்றன?

நாய் அழுதால் எமன் வருகிறான் என்கிறார்களே? உண்மையா?

"துவாரபாலக" என்ற சொல்லுக்குப் பகவான் இருக்கும் இடத்தில் வரயிற் காப்போனாக இருப்ப வர்கள் என்று பொருள்.

கோவிலில் கொடிமரம் பகவானுக்குப் பிரம்மோற்சவ சமயத்தில் கொடியை ஏற்றுவதற்கு உண்டானது. எங்கு பிரம்மோற்சவம் நடப்பதில்லையோ அங்கு கொடிமரம் இருக்காது.

ஆமாம். நாய் அழுவது அபசகுனம்.

● கடவுள் இல்லை எனக் கூறும் ஒரு நாத்திகவாதி எழுதிய புத்தகமொன்று தற்செயலாக எனக்குக் கிடைத்தது. அதில் அந்த நாத்திகவாதி (இப்படி)

கேட்டிருக்கிறார். கடவுள் அன்பு வடிவம், அருள் வடிவம் என்கிறார்கள். அப்படி அன்பே வடிவான கடவுள் கையில் மட்டும் அரிவாள், வேல், கத்தி போன்ற கொடூரமான செயல்களைப் புரியும் கருவிகள் எதற்கு என்று? ஆனால் எல்லாவற்றிற்கும் ஒரு காரணம் இருக்கும் என்பது எனது எண்ணம். தாங்கள் விளக்கம் கூற வேண்டும்?

கடவுள் எங்கும் பரம்பொருளாக நிறைந்துள்ளார். மக்களுக்கு நன்மை அளிப்பதற்காகத் தீயசக்திகளை அழிப்பதற்கு அடையாளமாகக் கையில் ஆயுதங்களை வைத்திருக்கிறார். யாரையும் கொல்வதற்காக அல்ல!

• பெரியவர்கள் செய்த பாவம் பிள்ளைகளைப் பாதிக்குமா? பாதிக்கும் என்றால் அதற்குப் பரிகாரம் என்ன?

பெரியவர்கள் செய்த பாவம் பிள்ளைகளைப் பாதிக்கும். ஆனால் பிள்ளைகள் நேர்மையுடனும், பக்தியுடனும், ஒழுக்கத்துடனும் வாழ்ந்தால் நிச்சயம் குறையும்.

• (அ) காலையிலும், மாலையிலும், பூஜை அறையில் விளக்கு ஏற்றும்போது எந்த எண்ணெயைப் பயன்படுத்த வேண்டும்?

(ஆ) காலையில் எழுந்திருக்கும்போது யாருடைய முகத்தில் விழிக்க வேண்டும்?

(இ) ஸ்ரீராமஜயம், முருகன் துணை மற்றும் எழுதினால் என்ன பலன்கள்?

தேங்காயெண்ணெய், கடலை எண்ணெய் தவிர, பாக்கி எண்ணெய்களில் விளக்கு வைக்கலாம்.

காலையில் எழுந்தவுடன் கண்ணாடி, பசுமாடு, தாய், தகப்பனார் முகத்தில் முழிக்கலாம்.

ஸ்ரீராமஜயம் போன்ற பகவான் நாமாக்களை எழுதுவதினால் மன அமைதி கிடைக்கும்.

* கருடதோஷம் என்று கேள்விப்படுகிறேன். அதை நீக்க என்ன செய்ய வேண்டும்?

பட்சி தோஷங்களுக்குப் பரிகாரம் சோதிடர்களைக் கண்டு தெரிந்து கொள்வது நல்லது.

* நான் தினமும் ரெயிலில் வேலைக்குச் சென்று திரும்புகிறேன். வீட்டில் மடி ஆசாரம் என்று என்னால் பார்க்க முடியவில்லையே?

நோய் நொடி இல்லாமல் இருக்க 'ஆசாரம்' பார்ப்பதால் தவறில்லை.

* ஒரு பக்கம் இன்று பிரமிக்கும்படியாக விஞ்ஞானம் வளர்கிறதே, இதனால் மெய்ஞானம் தடைப்படுமா?

இல்லை. விஞ்ஞானம் சரியான முறையில் வளர்ந்தால், அது மெய்ஞானத்துக்கு உதவியாக அமையும்.

* துன்பம் ஏற்படும்போது மட்டுமே மனிதன் கடவுளை நினைப்பது ஏன்?

தனக்கு ஏற்பட்டிருக்கும் துன்பத்திலிருந்து உடனடியாக நீங்கி விடுபடத்தான்.

* எதிர்பாராத ஆபத்து நெருக்கடியில் கடவுளிடம் வேண்டி, அர்ச்சனை அபிஷேகம் செய்யும் மனிதனுக்கு அது நீங்கிவிடுமோ?

  

மனிதனுக்குத் திடநம்பிக்கை வேண்டும். அதனால் நல்ல பலன் கிட்டும்.

மகாகவி பாரதியார், அதனால்தான் 'நம்பினோர் கெடுவதில்லை அது நான்கு மறைதீர்ப்பு'' என்று பாடியிருக்கிறார்.

* நான் ஒரு பாகவதக் கதைப் புத்தகம் வாங்கினேன். அதிகம் வயதாகவில்லை. வயதான காலத்தில்தான் அதைப் படிக்க வேண்டும் என்று சொன்னார்கள் சிலர். சந்தேகத்தைத் தீர்த்தருள்க?

இதில் சந்தேகமே வேண்டாம். இளமைப் பருவத்திலேயே பாகவதம் படிக்கலாம். விடாமல் படித்து வாருங்கள்.

* சுவாமி நைவேத்தியத்திற்குக் காய்ச்சின பால் சிறந்ததா? கறந்த பால் சிறந்ததா?

பிரசாதமாக அருந்த வேண்டியிருந்தால் காய்ச்சின பாலும், பகவானுக்கே அர்ப்பணமாக வேண்டுமென்றால் கறந்த பச்சைப்பாலைப் பயன் படுத்துங்கள்.

* இந்துக்களில் ஒருவர் மறைந்த பிறகு அவரது மகன்தான் ஈமக்கடன்களைச் செய்யச் சொல்லுகிறார்கள். மகன் இல்லாவிடில் மனைவி செய்யக் கூடாதா?

மறைந்தவரின் மனைவியிடம் 'புல்' வாங்கிக் கொண்டு உறவினர்களில் ஒரு ஆண் மகன்தான் செய்ய வேண்டும். அல்லது நெருங்கிய பந்துக்கள் உறவினர்கள் செய்ய வேண்டும்.

* உலகில் பாவம் செய்த மனிதனைக் கடவுள் மன்னித்துத் தன்னுடன் சேர்த்துக் கொள்வாரா?

அல்லது பாவத்தை அனுபவிக்க மறுபிறப்புக்கு மீண்டும் அனுப்புகிறாரா?

இறைவன் பாவம் செய்தவனை மன்னித்து நல்லவனாகப் பூவுலகம் அனுப்பி வைக்கிறான். ஏன்?

நல்லவனாகப் பிறவி எடுத்தவன் மூலம் பாவம் செய்யும் மற்றவர்களை நல்லவர்களாக்கவே அப்படி அனுப்புகிறார்.

• கல்விச் செல்வம் வழங்கும் தெய்வமான ஸ்ரீ சரஸ்வதி தேவிக்கு வெள்ளை ஆடை அணிந்திருப்பது, சிலைகளுக்கு அணிவிப்பது ஏன்? எனக்கு இது புரியவில்லை. விளக்கம் அருளுங்கள்?

இன்றைய உலகில் எல்லாப் பொருள்களிலும் கலப்படம் என்பது தவிர்க்க முடியாததாகி விட்டது. அறிவில் கலப்படம் வந்தால் மிகவும் ஆபத்தாயிற்றே!

காலத்தின் கூற்று. இன்று அறிவில்கூடக் கலப்படம் புகுந்துவிட்டது.

இத்தகைய நிலைக்குக் காரணம் அறிவில் புகுந்த கலப்படம்! அறிவில் தூய்மை கெட்டுவிட்டமையைக் காண்கிறோம்.

அறிவு நிர்மலமாக ஸ்படிகமாக இருக்க வேண்டும் என்பதை நினைவூட்டவே கல்விக்கு அதிபதியான ஸ்ரீ சரஸ்வதி வெள்ளை ஆடை உடுத்தியிருக்கிறாள்!

• பக்தி, சக்தி இவற்றில் எதற்கு அதிக முக்கியத்துவம் தர வேண்டும்?

சக்தி இருக்குமிடத்தில்தான் பக்தி வளர்கின்றது. வளர்ந்து வரும்.

* மனத்தைப் பண்படுத்த தெய்வ வழிபாட்டைப் போல, வேறு வழியும் உண்டா?

பிராணாயாமம். யோகாசனங்களும், நல்ல எண்ணங்களும் மனத்தை ஒருமைப்படுத்துவதற்கு உதவும்.

* 'அவன் தலையில் எழுதியபடிதான் நடக்கும். தலை விதியை மாற்றி எழுத முடியுமா?' என்று சொல்கிறார்கள். கடவுளைவிட விதி வலிமை படைத்திருக்கிறதா?

விதி வலிமையானதே. அதையும் இறைவன் அருளால் விதியின் வலிமையை, சோதனைகளைக் குறைத்துவிட முடியும்.

திருஞானசம்பந்தர் கோளாறு பதிகத்தில் 'வெப்பொடு குளிரும் வாதம் மிகையான பித்தும் வினையான வந்து நலிலா... அப்படி நல்ல நல்ல அடியார் அவர்க்கு மிகவே' என்ற பாடல் வரிகள் குறிக்கும்.

• 'ஆதித்ய ஹிருதயம்' தோத்திரத்தைக் கன்னிப் பெண்கள் படிக்கலாமா? கன்னியர் சூரிய நமஸ்காரம் செய்யலாமா? சூரியனுக்குச் சொல்ல தனி தோத்திரம் உண்டா?

ஆதித்ய ஹிருதயம் பெண்களும் சொல்லலாம். சூரிய நமஸ்காரம் செய்யலாம்; தோத்திரம் படிக்கலாம்.

• நான் பதிதன் என் வீட்டில் இருக்கும் சாளக்கிரமங்களுக்குப் பூஜை செய்யலாமா? தினமும் பகவான் நாம கீர்த்தனைகள் பாடவேண்டுமா?

உங்களுக்கு நாம ஜபமே போதுமானது.

✽ முன்பு ஒரு முறை 'ஸௌந்தர்யலஹரி' யில் உள்ள "முதல் ஸ்தோத்திரம், கடைசி ஸ்தோத்திரம் இரண்டும் படித்தால்கூட போதுமானது" என்று பதில் அருளியதைப் படித்தேன்.

முதல் பாடல் ஆரம்பம், கடைசிப் பாடல் தொடக்க வரிகளைக் கூறினால் பெரும் உதவியாக இருக்குமே; நான் புரிந்து கொள்வேன்.

முதல் சுலோகம் ஆரம்பம்:
'சிவச்சக்தாயா யுக்த:'
கடைசி சுலோகம் தொடக்கம்:
'ப்ரதீபஜ்வலாபி':
பரம பக்தியுடன் 'ஸௌந்தர்யலஹரி' பாராயணம் செய்ய வேண்டும்.

✽ திருமணம் நிச்சயிக்கப்பட்டதும் திருமணத்துக்கு மூன்று நாட்கள் முன்னதாகப் பந்தக்கால் நடுகிறார்களே, ஏன்?

திருமணம் போன்ற சுபகாரியங்கள் நல்ல முறையில் நடைபெறுவதற்கு சுபமுகூர்த்த வேளையில் பந்தக்கால் முதல் இதர முகூர்த்த வேலைகளும் தொடங்க வேண்டும். அதை முன்னிட்டு பந்தக் காலில் காவியடித்து மாவிலை கட்டி நடப்படுகிறது.

✽ சனிக்கிழமையில் சனி பகவான் சன்னதியில் எள் விளக்கு ஏற்றலாமா? ஒரு சிலர் கூடாது என்று சொல்லக் கேட்டேன். குருபீடம் என் சந்தேகத்தைத் தீர்க்க வேண்டும்?

சனியன்று சனி பகவான் சன்னதியில் எள் விளக்கு ஏற்றுவது மிகவும் நல்லது.

• அஷ்ட குணங்களைச் சொல்லும் பெயர்கள் என்னென்ன?

1. ஞானம், 2. ஐஸ்வர்யம், 3. தபசு, 4. பலம், 5. ஓஜஸ், 6. வீர்யம், 7. கருணை, 8. ஔதர்யம், (மிகுந்த கொடை)

* 'செவ்வாயோ வெறும் வாயோ' என்கிறார்கள். செவ்வாய்க் கிழமைகளில் ஏன் சுப நிகழ்ச்சி செய்வதில்லை? 'மங்கலவாரம்' என்று செவ்வாய் பற்றிச் சொல்கிறார்களே?

நம் நாட்டில் ஆன்றோர்கள் எதையும் அமங்கலமாகச் சொல்லக் கூடாது என்று ஒரு கோட்பாடு வைத்திருக்கிறார்கள். 'செவ்வாய் தினம்' அமங்கல வாரம் என்று சொல்லக் கூடாது என்பதற்காகவே 'மங்கலவாரம்' என்கிறார்கள். செவ்வாய்க் கிழமைகளில் திருமணம், கிருகப்பிரவேசம், புதியது வாங்குதல், விற்றல் செய்வதில்லை. சுபகாரியங்களும் செய்வது வழக்கமில்லை.

* படித்தவர்கள்கூடக் கடவுளைப் பற்றி தூற்றிப் பேசுகிறார்களே?

'கற்றதனாலாய பயனென் சொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்'

என்ற வள்ளுவத்தை நினைவு கூறவும்.

* சோதிடம் பொய்யானது என்று கூறுவது பற்றி?

சோதிட சாத்திரம் பொய்யாகாது! சொல்பவர்களின் திறமை, அறிவுக்கு ஏற்ப பலன்கள் மாறுபடலாம்.

• எழுதும்போது, முதலில் பிள்ளையார் சுழி போடும் வழக்கம் எல்லாத் தமிழர்களிடமும் இருக்கிறது இந்தப் பிள்ளையார் சுழி போடுவதன் தத்துவம் என்ன?

எந்த ஒரு நல்ல செயலும் இடைஞ்சல்கள் இல்லாமல், வெற்றிகரமாக முடியப் பிள்ளையாரை வணங்குவது வழக்கம். சிலர், வழிபாட்டுடன் அர்ச்சனையும் செய்வார்கள்.

அதேபோல, எழுத ஆரம்பிக்கும்போது. அது எதுவாக இருப்பினும், தடங்கல் இல்லாமல் முடியப் பிள்ளையாரை வணங்கி சுழிபோடுகின்றோம். சிலர் 'ஓம்' என்றும் எழுதுவதுண்டு!

• முப்பிறவி, மறுபிறவி என்றெல்லாம் சொல்லப் படுவது உண்மைதானா?

மனிதனின் வாழ்க்கையில் அவன் செயல்கள், எண்ணங்கள் இதில் காணும் மாற்றங்களைக் கொண்டு, மறுபிறவி உண்டு என்று தெரிகிறது. மறுபிறவி வேண்டாம் என்பதற்காகவே பலர் புண்ணிய காரியங்களை அதிகம் செய்கிறார்கள்.

• 'பூஜையின் போது இரண்டு வெள்ளி விளக்குகளில் நெய் திரி போட்டு, அரிசி மாவினால் ஸ்ரீராம ஜயம், இருதய கமலம் கோலம் போடுகிறேன்.

கோலம் போடும்போது எந்தத் தோத்திரம் கூறினால் நல்லதாக இருக்கும்?

பெண்கள், எதையும் தோத்திரம் சொல்லிக் கொண்டே செய்து வருவது நல்ல பழக்கம்.

'சமையல் செய்யும்போது கூடவே தோத்திரமும் கூறுகிறேன்' என்று சில குடும்பத் தலைவிகள் கூறியிருக்கிறார்கள்.

 

• வீட்டில் பூஜையில் இருக்கும் விக்ரகங்களுக்குக் கன்னிப் பெண்கள் அபிஷேகம் செய்யலாமா?

கன்னிப் பெண்கள் பூஜை விக்கிரகங்களுக்கு மலர்கள் வைத்து வணங்கலாம். அபிஷேகம் செய்யக் கூடாது.

• வடக்கில் தலை வைத்துப் படுக்கக் கூடாது, தெற்கு திசையில்தான் தலை வைத்துப்படுக்கவேண்டும் என்று கூறுகிறார்கள்.

திசைகளில் தலை வைத்துப் படுப்பது பற்றி எனக்குத் தெளிவாகச் சொல்லுங்கள் குருவே?

இந்தக் கேள்விக்குத் தமிழில் உள்ள முதுமொழி ஒன்றைக் குறிப்பிடுகின்றேன். 'தன்னூர் கிழக்கு; தங்கின ஊர் மேற்கு; வேட்டான் ஊர் தெற்கு; வேண்டாதான் ஊர் வடக்கு.'

• சீயக்காய்த்தூள், அரப்பு முதலியவற்றைக் கணவனுக்கானாலும் உறவினருக்கானாலும் கையில் தரக் கூடாதாமே, ஏன்?

உறவு கசந்துவிடக் கூடாது என்பதற்காக-கையில் கொடுக்கவோ, வாங்கிக் கொள்ளவோ கூடாது. தரையிலோ மேடையிலோ வைக்கலாம். மற்றும் உப்பு-எண்ணெய் முதலியவற்றையும் கையில் கொடுத்து வாங்கிக்கொள்ளக் கூடாது. கீழே வைத்துத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும்

• மறைந்து போனவர்கள் மீண்டும் உலகில் பிறந்து விடுகிறார்கள். பிறகு ஏன் 'பித்ரு (தென் புலத்தாருக்கு) கடன்' செய்கிறார்கள்?

வாழ்ந்த மனிதர்கள், ஆயுள் முடிந்து இறந்து விடுகிறார்கள். மீண்டும் உலகில் பிறவி எடுத்திருந்

  

தாலும் நம்மை வளர்த்து ஆளாக்கியிருப்பதற்காகவே, 'பித்ரு கடன்' செய்யவேண்டும். அவர்கள் எப்பிறவியில் பிறந்திருப்பினும், இன்பமாக இருப்பதற்குப் 'பித்ரு கடன்' இன்றியமையாதது.

* இன்றைய பாரத நாட்டில், வடக்கில் பதட்ட நிலைமை, வகுப்புக் கலவரங்கள் மீண்டும் பரவாமல் தடுக்க நல்ல அறிவுரை கூறுங்கள்?

இந்த விரோத மனப்பான்மை தீரவும், சமாதானம் தழைக்கவும் இந்த வழியைப் பின்பற்றுங்கள் :

''ஸப்கோ ஸன்மதி தே பகவான்'' என்று மன முருகி பிரார்த்திப்பதும், ஒற்றுமையுணர்வு வளர்க்கும் பணிகளில் அனைவரும் முழு மனத்துடன் முனைந்தால், சகோதரத்துவம் வளரும்; அன்பும் வளரும்.

* வீட்டில் பெண்கள் இல்லை. வெளியூர் சென்ற சமயங்களில் ஆண்கள் விளக்கேற்றிப்பிறகு சமாதானம் செய்யலாமா?

தடை ஏதுமில்லாமல் செய்யலாம். பூஜை அறையில் மாடத்தில் தீப மங்கள ஜோதியை ஆணும் ஏற்றலாம், பெண்ணும் ஏற்றலாம்.

* ஆண்டு முழுவதும் வெள்ளிக்கிழமைகள் வருகின்றன. ஆனால் ஆடி, தை வெள்ளிக்கிழமைகளுக்கு மட்டும் அதிக விசேஷம் இருப்பது ஏன்?

வருஷத்துக்கு இரண்டு அயணங்கள். ஆறு பருவங்கள் உள்ளன. உத்தராயணம் தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி முடிய இருக்கும்.

தட்சிணாயனம் ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி முடிய இருக்கும்.

  

அயணங்களின் முதல் மாதம் முடிய வெள்ளிக் கிழமைகள் விசேஷமாகச் சொல்லப்படும்.

அன்புக்கும் அருளுக்கும் என்ன வேறுபாடு?

அன்பு மனிதன் மற்ற மனிதர்களிடம் காட்ட வேண்டியஒன்று. அருள் என்பது இறைவனால் அளிக்கப்படுகிறது.

• இந்து மதத்தின் மிகப் பெரிய சாதனை என்று எதைக் குறித்துச் சொல்லலாம்?

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இருந்து வருகிறது நமது பாரத தேசம். இந்த நாட்டைப் பல மதத்தவர்கள் ஆண்டிருக்கிறார்கள்.

இந்துக்களாகிய நாம் எத்தனையோ இடையூறு களையும் இடிபாடுகளையும் தாங்கி வந்திருக் கிறோம். எத்தனையோ வேற்றுமைகள் இருந்த போதிலும், ஒற்றுமையுடன் இந்த நாடு இருந்து வந்திருக்கிறது. அதை இந்துக்களின் தன்மையாக இன்றளவும் இருப்பது மிகப்பெரிய சாதனையாகச் சொல்லலாம்.

• வேலைக்குச் செல்லும் பெண்களுக்கு ஏற்ற தங்கள் மேலான அறிவுரைகள் யாவை?

எந்தப் பணிக்குச் சென்றாலும் தனக்கும் தன் குடும் பத்திற்கும் குந்தகம் ஏற்படாமலிருக்கும்படியாக நடந்து கொள்ள வேண்டும். ஒழுக்கம் தவறாமல் நடந்து கொள்ள வேண்டும்.

• சனீஸ்வர பகவானைச் சனியன்று தவறாமல் பிரதட்சணம் செய்வதால், தீமைகள் நீங்கி நன்மை கிடைக்குமா?

சனியன்று சனீஸ்வரரை வழிபடலாம். சனிக்கிழமை நாராயணனுக்கும் உகந்த நாள். அன்று அவரையும் வழிபடுவது இன்னும் நல்லது.

• விதியைக் கடவுளால் மாற்ற முடியாதா?

பிறந்தவர்கள் அனைவரும் ஒரு நாள் மறைய வேண்டும். இது இறைவன் நியதி. ஒவ்வொருவரும் அவரவர் விதிப் பயன் காரணமாகத் துன்பங்களை அனுபவிக்க நேரிடுகிறது. மின்சாரம் ஒளி கொடுக்கிறது. அது அதன் நியதி. எப்படி மின்சாரம் கொடுக்கிறது என்று கை வைத்துப் ப்ரீட்சை பார்த்தால் 'ஷாக்' அடிக்கிறது. அது நம் விதிப் பயன்.

இறை வழிபாட்டால் நம் விதிப்பயனைக் குறைக்க முடியுமே தவிர விதியை யாராலும் அழிக்கவோ, மாற்றவோ முடியாது.

• தனக்காகப் பிரார்த்தனை செய்வதைவிடப் பிறருக்காகப் பிராத்திப்பது உடனே பலன் தரும் என்கிறார்களே, வேண்டுகிறேன்!

ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்க்கை மேம்பாட்டுக்காகப் பிரார்த்தனை செய்வது நல்லது. உலகம் முழுவதும் அனைவரும் நலமாக இருக்கப் பிரார்த்தனை செய்வது இன்னும் மேலானது. தானும் வாழ்ந்து பிறரும் வாழப் பிரார்த்தனை செய்வது உன்னதமான பிரார்த்தனையாகும்.

• ஈர உடையுடன் ஆலயங்களில் வழிபடச் செல்லலாமா. என் சந்தேகத்தை நீங்கள்தான் தீர்க்க வேண்டும்?

ஈர ஆடைகளுடன் ஆலயங்களில் வழிபடக் கூடாது, கூடாது.

✻ குருபக்திக்குரிய விதி முறைகள் என்னென்ன?
கல்வி போதிக்கும் குரு, இல்லங்களில் சுப நிகழ்ச்சிக்கு வரும் வாத்தியார், வாழ்க்கைக்கு வழி காட்டும் ஞான குரு-இம்மூவரும் நமக்கு வழிகாட்டி கள். இவர்களிடம் மதிப்பும் மரியாதையுடனும் நாம் இருப்பதுதான் விதிமுறைகள்.

✻ தவறாத பக்தி ஜபத்தினால் நமது ஆன்மா எப்படிப்பட்டது என அறிய முடியுமா?
ஜபம் செம்தவன் முக்கிய நோக்கமே நம் பாபம் அகல்வதும் மனத் தூம்மை பெறுவதுதான்.

✻ நமது இந்து மதத்தில் ஏராளமான கடவுள்கள் இருக்கிறார்கள். மற்ற மதத்தில் உள்ளது போல 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்று இந்துக்கள் வழிபடலாகாதாயே...?
இந்து மதத்திலும் கடவுள் ஒருவர்தான்.
ஒரே பலன் குறித்து மட்டும் நாம் கடவுளிடம் போவதில்லை...!
பல விதமான பலன்களைக் கேட்டுப் பக்தி செய்வ தால், பல வழிகளில், பல தோற்றங்களில் இறை வனை வழிபடுகிறோம்.
எல்லா ஆறுகளும் ஒரே கடலில்தான் சங்கமம். அதேபோல வழிபாடுகளும் ஒன்றில்தான் அடங்கும்.

✻ அலுவலகத்துக்குச் செல்லும் என்னைப்போன்ற பெண்கள், மாதவிலக்கான நாளில் குளித்துவிட்டுக் கோயிலுக்குப் போகலாமா...?

மாத விலக்கு நாட்களில் கை, கால் அங்க சுத்தம் செய்துவிட்டு (வீட்டிலிருந்தபடி) சுவாமியை நினைத்துக் கும்பிட்டால் போதுமானது.

• நவக்கிரகங்களை மாலை நேரத்தில் வழிபடக் கூடாதாமே...? சிலர் சொல்லக் கேட்டேன். நவக்கிரகங்களை எத்தனை முறை பிரதட்சணம் செய்ய வேண்டும்...?

நவக்கிரக வழிபாட்டுக்கு மாலையும் உகந்த நேரமே. குறைந்தது ஒன்பது முறை நவக்கிரகத்தை வலம் வருவது நல்லது.

• முன்பெல்லாம் கிராமத்துப் பெரியவர்கள் எண்ணெய் ஸ்நானத்திற்கு முன்பு ஏதோ ஒரு மந்திரம் சொல்லிக்கொண்டே தலையில் எண்ணெயைத் தேய்ப்பார்களாம். அதை நான் அறியலாமா...?

எண்ணெய் தேய்த்துக் கொள்ளும்போது சொல்லும் மந்திரம்: 'அச்வத்தாமா பலிர் வ்யாஸோ ஹனூமாம்ச்ச விபீஷண்,' க்ருப: பரசுராமச்ச ஸப்னனதே சிர ஜீவன:' என்பதே.

• வீட்டில் வாழை, எலுமிச்சை, செவ்வாளி போன்ற மரங்களை வளர்க்கக் கூடாது. வளர்த்தால் சங்கடங்கள் வருமாமே...? உண்மையா...?

நீங்கள் குறிப்பிடும் மரங்களை வீட்டில் வளர்க்கக் கூடாது என்பதற்கு எந்தச் சாத்திரத்திலும் ஆதாரம் கிடையாது.

• ஒரு சந்தேகம். பில்லி, சூனியம் என்பவை உண்மையா, பொய்யா...?

உண்மையே...!

• கல்லூரி மாணவனாகிய நான், படிப்பில் சிறந்து விளங்க ஆசைப்படுகிறேன். அதற்கு என்ன தோத்திரம் தினமும் கூறி வழிபட வேண்டும் என்பதை ஜகத்குரு வாகிய தாங்கள் தெரிவிக்க வேண்டுகிறேன்...?

ஔவையார் பிள்ளையாரை வழிபட அருளிச் செய்தது— "வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள் நோக்குண்டாம் மேனி நுடங்காது பூக்கொண்டு துப்பார் திருமேனித் தும்பிக்கையான் பாதம் தப்பாமல் சேர்வார் தமக்கு" இப்பாடலைத் தினமும் பாராயணம் செய்து வந்தால், நல்ல பலன் கிட்டும்.

• விரதம் என்றால் என்ன...? சுமங்கலிகள் இரவில் கண்டிப்பாகச் சாப்பிட வேண்டும் என்கிறார்கள். விரத நாட்களில் இரவில் சாப்பிட முடியாதே...? விளக்கம் வேண்டுகிறேன்...?

ஏகாதசி, சஷ்டி, கிருத்திகை போன்ற புனித நாட்களில் உபவாசம் இருப்பது மிகச் சிறந்தது. இம்மாதிரி விரத நாட்களில் ஒரு வேளை சிற்றுண்டியுடன் இருப்பதும் சிறந்ததே.

சுமங்கலிகள் இரவில் கண்டிப்பாகச் சாப்பிட வேண்டுமென்பது நியமமில்லை.

• எங்கள் வீட்டில் செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் விளக்குத் தோத்திரம் படித்து வருகிறோம். அப்போது குத்து விளக்கில் ஐந்து முகங்களிலும் தீபம் ஏற்றத்தான் வேண்டுமா...?

விளக்கு தோத்திரத்தின்போது ஐந்து முகங்களிலும் தீப ஜோதி ஏற்றுவதே நல்லது. சுபமானது.

ஒரு காரியம் வெற்றிகரமாக நிறைவேறினால் ஸ்ரீ விநாயகப் பெருமானுக்குச் சிதறு தேங்காய்

உடைப்பதாக நேர்ந்து கொள்வதன் நோக்கம் எதுவாக இருக்கும்...?

எடுத்த முயற்சி நிறைவேறிட இடையூறுகள் வருமானால், அவை துகள் துகளாகச் சிதற வேண்டும் என்பதற்காகத்தான், பிள்ளையாருக்குச், 'சிதறு காய்கள்' உடைக்கிறோம்.

* ஏகப்பட்ட பிரச்சனைகளினால் மனம் அலை பாய்கிறது. மனதை ஒரு நிலைபடுத்திட முடியவில்லை. மன அமைதி இல்லாமல் தவிக்கிறேன். இதற்கு ஒரு வழி காட்டுங்கள்...?

மனஒருமைப்பாட்டுக்கு யோகாசனமும், பிராணாயாமம் மிகவும்நல்லது. தெரியாதவர்கள் இவற்றைப் பயின்றால், மன அமைதி நிச்சயம் கிடைக்கும்.

மனம் ஒருமைப்பாட்டால் அமைதி கிடைத்துவிடும்.

* எனக்குத் தினமும் தவறாமல் கனவுகள் வருகின்றன. பஸ் லாரிகளில் பயணம் செய்வது போலவும், வாகனங்கள் இறங்குவது மாதிரியும் தெரிகிறது. திருமணம் ஆகிவிட்டதாகவும் அடிக்கடி கனவு. இது கெட்டதாக இருந்தால் பரிகாரம் கூறுங்கள்...?

தினமும் படுக்கையில் அமர்ந்து ஆஞ்சநேய ஸ்வாமியை நினைத்து, தோத்திரம் செய்துவிட்டுத் தூங்கவும். தீய கனவுகள் பலிக்காது.

* எந்தப் பிராணிகளைத் தெய்வமாகப் பூஜிக்க வேண்டும்...?

பசுமாட்டையும், யானையையும் தெய்வமாகப் பூஜிக்க வேண்டும்.

  

* என் கணவருக்கு நல்ல சிந்தனைகள், செயல்கள் வர வேண்டுமென்று எல்லாக்கடவுள்களிடமும் தினமும் வழிபடுகிறேன். எந்தத் தெய்வத்தைப் பூஜித்தால் குறைகள் உடனே நீங்கும்...?

தங்கள் குலதெய்வத்தைப் பூஜை செய்க. மனக் குறைகள் உடனே நீங்கும்.

* கோயில்களுக்குக் கும்பாபிஷேகம் பன்னிரெண்டு வருடங்களுக்கு ஒரு முறை நடத்தப்படுவதற்கு முக்கிய காரணம் உண்டா...?

கோயிலில் உள்ள மூர்த்திகளுக்கெல்லாம் அஷ்ட பந்தன மருந்து சார்த்தப்படும். பன்னெடு காலமாக இதை நாம் அனுசரித்து வருறோம். அஷ்டபந்தன மருந்துகள் 12 வருடங்களில் கரைந்துவிடும். ஆகவேதான் மீண்டும் அஷ்டபந்தன மருந்து சார்த்தி, கோயில் புதுப்பிக்கப்பட்டுக் கும்பாபிஷேகம் செய்யப்படுகிறது.

* வெள்ளிக் கிழமை தோறும், திருவிளக்கு அர்ச்சனை, லலிதா சகஸ்ரநாமம், மகாலட்சுமி அஷ்டோத்ரம், அபிராமி அந்தாதி சொல்லி, புஷ்ப, குங்கும அர்ச்சனை செய்கிறேன்.

அமாவாசை, வெள்ளியன்று வந்தால், பூஜை செய்யக் கூடாதா...? பித்ரு தர்ப்பணம் முடிந்து செய்ய லாமா...? சிலர் சந்தேகத்தைக் கிளப்பிவிட்டனர். குரு வின் ஆக்ஞைப்படி செய்ய நினைக்கிறேன்...?

அமாவாசை போன்ற திதி கொடுக்கும் நாட்களிலும் மற்ற நாட்களிலும் பெண்கள் எப்போதும் போலத் தோத்திர பாராயணம் பூஜைகள் செய்யலாம்.

* ஞாயிறு, செவ்வாய் தினங்களில் நான் ராகு காலத்தில் துர்க்கைக்கு விளக்கேற்றி, தோத்திரம் கூறி வழிபடுகிறேன்.

ராகுகாலப் 'பூஜைக்குக் குளித்த பிறகுதான் செய்ய வேண்டுமா...? கால் கை சுத்தம் செய்து துர்க்கையை வழிபடலாமா ...?

கை, கால் சுத்தம் செய்துவிட்டுத் துர்க்கைக்குத் தோத்திரங்கள் சொன்னால் போதுமானது. ஒவ்வொரு தினமும் மாலையில் விளக்கேற்றி, பிறகும் துர்க்கா ஸ்தோத்திரம் சொல்லலாம்.

* நான்காம் பிறைச் சந்திரனைப் பார்த்தால் நாய்படாத பாடு படுவார்களாமே, உண்மையா ...?

நான்காம் பிறை கண்டால் மிகுந்த துன்பம் என்பதைக் குறிக்கும் பழமொழி.

ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா முதல் சாதாரண மனிதர் வரை நான்காம் பிறை கண்டு இடைஞ்சல்கள் வந்ததாக அறியப்படுகிறது. இதற்குத்தான் மூன்றாம் பிறையைப் பார்த்து விட்டால் நான்காம் பிறை இடைஞ்சல்கள் வேகம் குறையும் என்பதை அனுபவத்தால் அறியப்படுகிறது.

* காயத்ரி மந்திரத்தின் தமிழ் அர்த்தத்தைச் சுருக்கமாகக் கூறுமாறு வேண்டுகிறேன்...?

காயத்ரி மந்திரத்தின் பொருள்— ''ஸ்ரீ சூரிய பகவானே...! இறைவனே...! எனக்கு நல்ல புத்தியைக் கொடு...!''

* சஷ்டி, கிருத்திகை விரத நாட்களில் சஷ்டி கவசம் படித்து, மனம் ஒருமைப்பட்டு, கற்பூர ஆரத்தி எடுத்து வழிபடுகிறேன். மதியம் மட்டும் உணவு. இது

போதுமா...? பூஜை செய்து இலைபோட்டு இறைவன் முன்பு படையல் செய்த பிறகு சாப்பிடுவது நல்லதா...?

விரத நாட்களில் பாராயணம் முடிந்த பிறகு, இறைவன் முன்னால் நைவேத்தியம் செய்து, பிறகு உணவு உட்கொள்ளலாம்.

• வீடுகளில் வாழைக்காயைச் சிரார்த்த தினம் மற்றும் அமாவாசை நாட்களில் கண்டிப்பாக சமைக்க வேண்டுமென்பதற்குக் காரணம் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்...?

வாழைக்காய் தென் புலத்ததாருக்கு(பித்ருக்களுக்கு) ஏற்றது. ஒருவன் அன்னம் மற்றவை சமைத்து சிரார்த்தம் செய்யச் சக்தியில்லை, வசதி இல்லை என்றால் ஒரு வாழைக்காயும், அரிசியும் பிராமணர் ஒருவருக்குக் கொடுத்து விட்டால் போதுமானதாகும்.

• பிற மதங்களில் உள்ள பெண்கள், அம் மதத்தில் உள்ள வேதங்களை அறிந்து கொள்வது போல, இந்து மதத்திலும் இந்துப் பெண்கள் வேதங்களைப் படிக்கலாமா? தெரிந்து கொள்ள லாமா?

நமது இந்து மதத்தில் உள்ள வேதங்களின் கருத்துக்கள் 'பகவத்கீதை' யிலும், புராணங்களிலும் இருக்கின்றன. இவற்றை இந்து மதத்தில் உள்ள பெண்கள் அனைவரும் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று உபன்யாசங்களில் சொல்கிறோம்.

• செம்பருத்திப் பூவை இறைவனை அர்ச்சிக்க உபயோகிக்கலாமா?

செம்பருத்திப் பூவை விநாயகர், அம்பாள், சூரிய பகவான் முதலியவர்களின் பூஜைக்கு உபயோகப் படுத்தலாம்.

• 'திருப்பதி வேங்கடாஜலபதியை நம்புங்கள். கடிதம் கிடைத்த ஐந்து நாட்களுக்குள் 20 பிரதிகள் எடுத்துத் தோழிகளுக்கு அனுப்பாவிடில் துன்பம் நிகழும்' என தபால் மூலம் பயமுறுத்தப்படுகிறது. இது குறித்து ஒரு நல்ல விளக்கம் கூறுங்கள்?

ஸ்ரீ வேங்கடாஜலபதியைப் பக்தியுடன் நம்புங்கள். அது போதும். 'நாராயணா' என்று கூறினால் கூடப் போதுமே... அப்படி இருக்க, இருபது கடிதங்கள் எதுவும் எழுத வேண்டாம்.

• நான் ஒரு கடவுள் நம்பிக்கை கொண்ட பக்தை தான். எந்தக் காரியத்துக்கும், நாள் நட்சத்திரம், ராகு காலம், எம கண்டம் பார்ப்பதில்லை. கிரகங்களுக் கெல்லாம் அப்பாற்பட்ட இறைவனை மனதில் நினைத்து அருஞ்செயல் எதையும் துவக்கினால் ஜெயம் தரும் என்று எண்ணுகிதேன். இது சரியா?

தெய்வத்திடம் பெரும் பக்தி கொண்டிருப்பதால், மகத்தான காரியத்தை முடிக்க வேண்டுமென்று தீர்மானித்து, அப்போது ஏதேனும் தயக்கம் ஏற்பட்டால் மட்டும், 'கோளறு பதிகம்' படித்து விட்டுத் தொடங்கவும். ஜெயம் பெறலாம்.

• வீட்டில் வேறு நபர்கள் இல்லாமல் இருப்பதால் மாத விலக்கு நாட்களில் ஒரு பெண் வாசல் தெளித்துக் கோலம் போடுவது ஏற்கக் கூடியதா?

பெண்கள் வீட்டிற்கு விலக்கான காலங்களில், வீடு வாசல் தெளித்து, கோலம் போடக் கூடாது. வெறும் தெருவாசலாகவும் இருக்கக் கூடாது. வேறு ஒருவர் மூலம் வீட்டு வாசல் தெளித்துக் கோலம் போடலாம்.

  

* ஜகத்குருவின் திருவாக்கு மூலம், நடைபெறும் கலியுகத்தின் சிறப்பை அறிய ஆவல்?

இப்போது நடக்கும் கலியுகத்தின் சிறப்பு பக்தியில் தான் இருக்கிறது. பக்தியினால் அளவற்ற நன்மைகள் வந்து சேரும்.

சைவத் திருக்கோயில்களில், பரமேஸ்வரன், விநாயகர், முருகன் மற்ற மூர்த்திகளுக்கும் வில்வத்தால் அர்ச்சிக்கிறார்கள். ஆனால் வைணவக் கடவுள்களுக்கு வில்வ அர்ச்சனை செய்யப்படுவதில்லையே, ஏன்?

வில்வத்தால், எல்லா ஆலயங்களிலும் அர்ச்சனை செய்யலாம். தோஷம் இல்லை. திருப்பதி ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளுக்கு வில்வத்தால் அர்ச்சனை செய்யப்படுகிறது. வில்வ அர்ச்சனை விசேஷமானது. நல்ல வாசமுள்ள மலர்களினாலும் கடவுளை அர்ச்சிக்கலாம். அது அவரவர்கள் வசதியைப் பொறுத்தது.

* இந்து மதத்தில் செய்த பாவங்களுக்குப் பிராயச்சித்தம் தேட வழி உள்ளதா?

இந்து மதத்தில்தான், மனிதன் செய்த ஒவ்வொரு பாவத்திற்கும் ஏற்ற பிராயச்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறது! இதர மதங்களில் ஒரே பிராயச்சித்தம் சொல்லப்பட்டுள்ளது.

* ஆண்டவனுக்குப் பூஜை செய்து, முடிவில் கற்பூர தீபாராதனை செய்கிறோம். கற்பூர தீபாராதனை, பின்னர், அதை நாம் கண்களில் ஒற்றிக் கொள்ளும் தத்துவம் என்ன?

பூஜை முடிந்து கற்பூரம் ஏற்றி தீபாராதனை செய்வதன் தத்துவம் இதுதான். இறைவன் ஜோதி வடிவானவன். அந்த ஜோதிக்குக் கற்பூரம் ஏற்றி,

ஜோதியை நினைவு கொள்ளவே, தீபாராதனை செய்யப்படுகிறது.

கற்பூர ஆரத்தியைக் கண்ணில் ஒற்றிக்கொள்வது அந்த ஜோதியை நம் உள்ளத்தில் ஏற்றிக் கொள்வதற்காகத்தான்.

கற்பூரம் எரிந்த பின்பு எதுவும் மிஞ்சாது. ஆனால் இந்த உலகிலே ஜோதி ஒன்றுதான் மிஞ்சும்!

* மிகக் கடினமான பார சுமைகளைச் சுமந்துள்ள வண்டியை இழுத்துச் செல்லும் மாடுகளைக் காணும் போது மனத் துன்பமடைகிறேன்.

வண்டிமாடுகள் சில சமயம் வண்டி ஓட்டுபவர்களால் துன்புறுத்தப்படுவதை எந்த வகையில் குறைக்க முடியும்?

மனிதன் முற்பிறவியில் செய்த பாவத்தினால் மாடாகப் பிறக்கிறான். 'இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ' என்றும் சொல்வார்கள். இந்நிலை மனிதனுக்கு வராமல் இருக்க வேண்டுமானால் அதிகத் தவறுகள் செய்யக் கூடாது.

மாடுகளை இம்சை செய்யவும் கூடாது. ஜீவப் பிராணிகளைக் கொடுமை செய்வதைத் தடுக்க எஸ். பி. சி. ஏ. சங்கம் பாடுபடுகிறது.

நம்மாலும் முடிந்தவரை மாடுகள் துன்புறாமல் பார்த்துக்கொள்ளலாம்.

* நவக்கிரகத் தோத்திரங்களை வீட்டில் அமர்ந்து கூறலாமா?

வீட்டிலும் நவக்கிரகத் தோத்திரங்களைச் சொல்லலாம்.

* குழந்தைகள் விளையாட சுவாமி விக்கிரகங்களைக் கொடுக்கக் கூடாது என்று வீட்டுப் பெரியவர்கள் சொல்கிறார்கள்.

குழந்தைகளோ சின்ன விக்கிரகங்களை வைத்து அபிஷேக அர்ச்சனை முதலியவை செய்யப் பிடிவாதமாக ஆசைப்படுகிறார்களே?

குழந்தைகளின் வழிபாட்டுக்கு விக்கிரகங்களைத் தரலாம். ஆனால் விளையாடத் தரக் கூடாது.

* இந்துக்களில் ஒருவரின் மறைவுக்குப் பின் சிலர் புதைக்கிறார்கள். சிலர் குறிப்பாக பிராமண சமூகத்தவர் தகனம் செய்கிறார்கள். எரிப்பதற்கும், புதைப்பதற்கும் ஏதேனும் முக்கியத்துவம் உண்டா?

ஒருவரின் மறைவுக்குப் பிறகு தகனம் செய்பவர்கள் கர்ம சித்தாந்தத்தையும், மறுபிறவி மூலம் ஒப்புக் கொள்பவர்களாவார்கள்.

புதைப்பவர்கள், மரித்தவருக்கு மறுபிறவி கிடையாது அல்லது மறுபிறவி வராது என்னும் கொள்கை உடையவர்களாக இருப்பார்கள்.

* வீட்டில் தினமும் செய்யும் சமையல் அன்னத்தைக் கடவுளுக்கு நைவேத்தியம் செய்கிறோம். அவன் அளிக்கும் உணவை அவனுக்குப் படைப்பதற்கு வேறு அர்த்தம் உண்டா?

நைவேத்தியம் செய்யும் உணவில் ஒரு பொட்டு நெய்யுடன், நீரினால் சுற்றுவது—பிறகு உண்பது நல்லது.

உணவில் திருஷ்டி தோஷம் ஏற்படாமல் இருக்கவே இப்படிநிவேதனம் செய்கிறோம்.

* கல்யாணங்களில் பட்டு வேட்டி, பட்டுப் புடவைகள் உபயோகப்படுத்தக் கூடாது என குரு பீடங்களாகிய தாங்கள் சொல்வதாக, பலர் கூறக் கேட்டேன். உண்மையா?

ஆமாம், உண்மைதான். பல உயிரினங்களைக் கொன்று தயாரித்த பட்டு வேட்டிப் புடவைகளை, திருமணம் போன்ற புனித நாட்களில் அணிய வேண்டாம் என்று ஸ்ரீமடம் பல ஆண்டுகளாகவே சொல்லி வருகிறது. பட்டுக்களில் சர்வோதய நிறுவனங்களின் அகிம்சாபட்டு தயாரிப்பை அணிந்து கொள்ளலாம் என்று சிபாரிசு செய்கிறோம்.

* சிவாலயங்களில் வழிபட்டு வரும்போது பிரகாரத்தில் உள்ள சண்டிகேஸ்வரரைக் கும்பிட்டுக் கை தட்டுவது ஏன்? என்ன காரணம்?

சிவதரிசனம் செய்த பிறகு சண்டிகேஸ்வரரைத் தரிசனம் செய்து வரவேண்டும். அவர் தியானம் செய்து கொண்டிருப்பதால், நாமும் தியானம் செய்துவிட்டு வந்ததற்கு அடையாளமாகக் கை தட்டும் வழக்கம் உள்ளது. (நாமும் தியானம் செய்ய வேண்டும் என உணர்த்துகிறார்.)

* வெள்ளிக் கிழமை தோறும் விளக்கு பூஜையுடன் ஸ்ரீலக்ஷ்மி அஷ்டோத்திரம் சொல்லி அர்ச்சனை செய்கிறேன். பிறகு விஷ்ணு படத்துக்கும் அர்ச்சனை செய்கிறேன்.

முதலில் விஷ்ணுவுக்குப் பூஜை செய்து லக்ஷ்மி பூஜை செய்வது முறையா, அல்லது லக்ஷ்மிக்கு முதலில் செய்வது முறையா?

  

**பூஜைக்கு கலந்த அட்சதை மீந்தால் மறுநாள், உபயோகிக்கலாமா?**

ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு முதலில் பூஜை செய்துவிட்டு, பிறகு ஸ்ரீலக்ஷ்மிக்கு அஷ்டோத்திரம் சொல்லி பூஜை செய்யவும். ஒவ்வொரு நாளும் பூஜைக்கு வேண்டிய அட்சதையை மஞ்சளிலோ குங்கு மத்திலோ கலந்து வைத்துக் கொள்வதுதான் மிகவும் நல்லது.

**• "இலங்கேஸ்வரன் நாடகம் மற்றும் திரைப் படத்தில் சீதாப்பிராட்டியின் பிறப்புப் பற்றி வரும் கதை யில் வேதவதியின் சாபம் காரணமாக இராவணனின் மகளாகப் பிறந்தாள். பின் அக்குழந்தையால் குலத் திற்கு அழிவு என அறிய நேர்ந்தது. பெட்டியில் கடல் மார்க்கமாக அனுப்பியதாகவும் அது ஜனகமகாராஜா வுக்குக் கிடைத்ததாகவும் கூறப்பட்டுள்ளது. மேலும் தன் மகள் வனத்தில் படும் துன்பம் தாளாது இலங்கைக்கு அழைத்து வந்ததாகவும் சித்தரிக்கப் பட்டுள்ளது.**

**மேற்கூறியவை யார் இயற்றிய இராமாயணத்தில் இருக்கிறது? புராணத்திற்குப் புறம்பாக உள்ளதென் றால் இதை நாடகமாக, சினிமாவாக அனுமதிக்கலாமா?**

**நமது இதிகாசம் பற்றிய பிரச்சனை எழுவதால் இக்கேள்விக்குப் பதிலளிக்குமாறு வேண்டுகிறேன்?**

அத்யாத்மிக ராமாயாணத்தில் ராவணனின் மகளாகச் சித்தரிக்கப்படுகிறது. மனோகர் கூட அதைத்தான் தமது 'இலங்கேஸ்வரன்' நாடகத்தில் காட்டுகிறார் என்று அறிகிறோம்.

• எங்கள் வீட்டில் சரஸ்வதி பூஜைக்காகவே கடைசி மூன்று நாட்கள் மட்டுமே நவராத்திரி கொலு வைக்கிறோம். இப்படி மூன்று நாட்கள் கொலு வைக்கலாமா?

நவராத்திரி நாட்கிழமைகளில் ஒன்பது நாட்களும் கொலு வைப்பது மிக மிக நல்லது.

குறைந்தது மூன்று நாட்கள் வைப்பது பற்றியும் குறை சொல்வதற்கில்லை.

• அம்பாளுக்குப் பாலாபிஷேகம், தேனாபிஷேகம் செய்கிறோம். ஆலயங்களிலும் இவ்விரு அபிஷேகங்களும் செய்யச் சொல்கிறோம். இதன் தாத்பரியம் என்ன?

அம்பாளுக்கானாலும் சரி, ஈஸ்வரனுக்கானாலும் சரி, பாலாபிஷேகம், தேனாபிஷேகம் செய்வது, பால்போல் தூய உள்ளம் அமைய வேண்டும். தேன்போல் வாழ்வு இனிமையாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான்!

• நாங்கள் செய்த மிகுந்த பிரார்த்தனையின் பலனாக ஒரு மகள் பிறந்திருக்கிறாள். பெண் குழந்தைக்கு நல்ல படிப்பு, பழக்க வழக்கங்கள். பெரியோர்களிடம் மரியாதையுடன் வளர வேண்டும். அதற்கு நான் எந்தத் தோத்திரம் படிக்க வேண்டும்?

பெற்ற தாயின் நியாயமான இந்த ஆசைகள் நிறைவேற வேண்டுமானால், உங்கள் இஷ்ட தெய்வங்களைத் தினமும் பிரார்த்தனை செய்து வரவும்.

பெற்றோரின் நல்ல பழக்கங்கள், குழந்தைகள் ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் பசுமரத்தாணியாகப் பதியும். தாயும் தந்தையும் ஒழுக்கமுடையவர்களாக இருந்து வழி காட்டவும்.

● நான் நாத்திகனும் இல்லை; ஆத்திகனும் இல்லை. ஆனால் கடவுளை நம்புபவன். கோவில் களுக்குச் செல்வேன்—எப்போதாவது. சமீப காலமாக நான் பார்த்திராத கோவில்களுக்குச் செல்வதுபோல கனவுக் காட்சிகள் அடிக்கடி வருவதன் காரணத்தை அறிய விரும்புகிறேன்?

நல்லதைநினைத்தால் நல்ல கனவுகள் வருகின்றன. கோயில்கள் காண்பதால் நல்ல சகுனம், நல்ல பலன் கிடைக்கும்.

● இறைவன் ஒன்றே என்பதை உணர்ந்தும் பலர் மதம் மாறுகிறார்களே ஏன்?

இறைவன் ஒன்றே என்ற ஞானானுபவம் இல்லாதது ஒரு காரணம். பொருளாதார ஆசை, சமூகத்தில் ஒரு கௌரவம் கிடைக்கும் என்ற வேறு ஆசைகளினாலும் மதம் மாறுவார்கள்.

❉ தினசரி கடவுளுக்குப் பூஜை செய்த பிறகு மறுநாள் அம்மலர்களை வீட்டில் உள்ள பூச்செடி களுக்கு உரமாகப் போடலாமா?

கூடவே கூடாது!

❉ ஜபம் நியமமாக எடுத்துக்கொண்டு பிறகு தினம் செய்யாவிட்டால், குடும்பத்தில் கெடுதல் ஏற்படுமா?

ஜபம் எடுத்துக்கொண்டுவிட்டால் கிரமமாகத் தினந் தோறும் செய்யவேண்டும். குறைந்த அளவிலாவது ஜபம் தவறாமல் செய்ய வேண்டும். அப்படி ஜபம் செய்ய முடியாவிட்டால், பசுமாட்டின் காதில் ஓதி, ஜபத்தை முடித்துக் கொள்ள வேண்டும்.

• தினமும் ஸ்ரீராமஜயம் எழுதி வருவதோடு ஆதிசங்கரரின் ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்கமும் சொல்லி வருகிறேன். வேறு பாராயண நூல்களும் படிக்கிறேன். ஸ்நானம் செய்துவிடில், வேறு வீட்டு வேலைகள் குறுக்கிட்டு, பாராயணம் செய்ய தாமதம், இதர உபத்திரவங்கள் வேறு. குளிக்காமல் நான் பாராயணங்களைப் படிக்கலாமா?

கைகால்களைக் கழுவிக்கொண்டு, நெற்றிக்குக் குங்குமம் இட்டுக்கொண்டு பக்தியுடன் பாராயணம் செய்யலாம்.

குளித்த பிறகுதான் செய்யும்படியான நிர்ப்பந்தம் பக்திக்கு இல்லை.

• இன்றும் சில இடங்களில் தீண்டாமை இருக்கிறதே, இதை ஒழிக்க வேண்டாமா?

தீண்டாமையை ஒழிக்கத்தான் வேண்டும். எல்லா மனிதர்களையும் மனிதனாகப் பார்த்தால் தீண்டாமை அகன்றுவிடும்.

❋ திருக்கோவில்களுக்கு விளக்கெண்ணெய் எடுத்துச் சென்று தீபம் ஏற்றலாமா?

விளக்கெண்ணெயினாலும் தீபம் ஏற்றலாம்?

❋ தீராத நோய்கள் நீங்கவும், நலமாகவும், மனக் கவலைகள் நீங்கியும் வாழ எந்தக் கடவுளைத் தோத்திரங்கள் கூறி வழிபட வேண்டும்?

நோய்கள் மனக்கவலைகள் நீங்க சூரிய நமஸ்காரம் செய்து வரவேண்டும். சூரிய நாராயணனிடம் பிரார்த்தனைகள் செய்து கொள்ள வேண்டும்.

❋ பௌர்ணமி விரதம் இருந்து இரவில் பூஜைகள் செய்து வந்தால் குடும்பம் செழிப்பாகும் என்கிறார்கள்.

  

எப்படி விரதம் இருந்து பூஜை செய்வது? என்ன மந்திரங்கள் உச்சரிக்க வேண்டும்?

பகலில் உபவாசம் இருந்து, பௌர்ணமி இரவில் அம்மனைப் பூஜை செய்யவேண்டும். பௌர்ணமி பூஜை செய்யும் பெண்களைக் கண்டு விபரம் அறியவும். வேதவிற்பன்னர்களைக் கொண்டு பூஜை தொடங்கி, மந்திரங்களை முறையாக அறிந்து கொள்ளவும். பௌர்ணமி விரதம் உயர்வுகள் அளிக்கும்.

* வீட்டில் பூஜை அறைக்குக் காலை மாலை இரு வேளைகளிலும் தீபம் ஏற்றி வணங்க வேண்டுமா? மாலை மட்டும் தீபம் ஏற்றினால் போதுமா?

இல்லத்தரசியாக இருப்பவர்கள் இரண்டு வேளைகளிலும் தீபம் ஏற்ற வேண்டும்; வழிபட வேண்டும்.

* எங்கள் வீட்டுப் பெரியவர்கள் ஸ்ரீராமரின் படத்தை வைத்துப் பூஜை செய்யலாகாது, ஸ்ரீராமஜயம் எழுதலாகாது என்று சொல்கிறார்கள். என் மனக் கலக்கத்தை அருள் கூர்ந்து தீர்க்கவும்?

வீட்டில் ஸ்ரீராமர் பட்டாபிஷேகப்படத்தை, ஸ்ரீராமர் லட்சுமணர், சீதாதேவி அனுமான் சகிதம் உள்ள படத்தை வைத்துக்கொள்ளலாம்; பூஜைகள் செய்யலாம். படத்தின் முன்பு அமர்ந்து ஸ்ரீராமஜயம் எழுதலாம்.

வீண் சந்தேகத்தால் மனக்கலக்கம் அடையாதீர்கள்.

* எங்கள் வீட்டில் சத்திய நாராயண பூஜை செய்து வருகிறோம். இந்தப் பூஜை ஆரம்பித்த பிறகு எங்கள் அனைவரின் வாழ்க்கையும் அமைதியாக, சுபிட்சமாக இருக்கிறது.

ஆனால் ஒரு ஐயப்ப குருசாமி, 2, 5, 7-வாரங்கள் மட்டுமே தொடர்ந்து செய்வதாக வேண்டிக் கொண்டு செய்ய வேண்டும் என்று கூறினார்.

எல்லாப் பௌர்ணமியிலும் சத்திய நாராயண பூஜை செய்யலாமா, கூடாதா?

ஸ்ரீ சத்திய நாராயண பூஜையைத் தொடர்ந்து செய்யலாம்.

* பூஜை மேடையில் அம்பாளின் இரு பக்கங்களிலும் வைக்கப்படும் ஸ்ரீ லக்ஷ்மி, ஸ்ரீ சரஸ்வதியை எந்த முறையில் வைத்திருக்க வேண்டும்?

அம்பாளின் வலது பக்கம் லக்ஷ்மியும், இடது பக்கம் ஸ்ரீ சரஸ்வதியும் இருக்க வேண்டும்.

* அரிசி மாவில் நீர் விட்டுக் கரைத்து வீட்டினுள் மாக்கோலம் போடுகிறோம். இதை எறும்புகள் உண்ண முடியாது. வீட்டில் மாக்கோலம் போடுவதன் தத்துவம் என்ன?

வீடுகளின் உட்புறம் உள்ள பூஜை, சமையலறை, ஹால் முதலிய இடங்களில் நீர் கரைத்த கோலம் போடுவது மங்களகரமானது. பெண்கள் இப்படிக் கோலம் போடும் முறை தொன்றுதொட்டு இருந்து வருகிறது.

எறும்புக்கு வீட்டு வாசலில் போட வேண்டும் அரிசி மாவால்.

* இல்லறம் நல்லறமாக அமைய வேண்டும். அதற்கு வேண்டுவது கணவன் மனைவி ஒருமித்த அறச் சொல்லா, அறச் செயலா?

இல்லறம் நல்லறமாவது இருவரும் ஒருமித்த அறச் சொல்லாலும், செயலாற்றுவதாலும் உண்டாகிறது.

* ஒரு மண்டலம் பூஜை செய்யவேண்டுமென்றால் 45 நாட்களா 48 நாட்களா?

பூஜையில் உட்காரும்போது எனக்கு மனம் சஞ்சலப்பட்டு அலைபாய்கிறது. என் மனம் ஒருமைப் பட்டு, பூஜையை முடிக்கும் உபாயம் கூறுங்கள்?

ஒரு மண்டலம் என்பது 48 நாட்கள்.

40-முதல்49 நாட்களுக்குள் சௌகரியப்படி இரண்டாம் பட்சமாக முடித்துக் கொள்ளவும்.

ஸ்ரீவிநாயகரை நினைத்துக் கொண்டு பூஜை செய்தால் மனச் சஞ்சலம் அகலும்.

* மாதந்தோறும் சஷ்டி, கிருத்திகை, விரதங்களைக் கடைப்பிடிக்கிறேன். பால் பழம் தவிர வேறு ஆகாரம் கிடையாது.

சில சமயம் கிருத்திகை, சஷ்டி அடுத்தடுத்த நாள் களில் வந்து விடுகிறது. சஷ்டி, கிருத்திகை விரதம் எப்படி மேற்கொள்வது?

இப்படி அடுத்தடுத்து சஷ்டி, கிருத்திகை வந்தால், முதல் நாள் திரவ ஆகாரமும் மறுநாள் உபவாசமும் இருக்கலாம்.

* மகாபாரதத்தை வீட்டில் படிக்கக் கூடாது. அப்படியே படித்தாலும் முதல் அத்தியாயம், கடைசி அத்தியாயம் இப்படி மாறி மாறிப் படிக்க வேண்டும் என்கிறார்கள். வீட்டில் பாரதம் படித்தால் கலகம் சண்டை ஓயாதாம். இது நம்பக் கூடியதா?

குருவிடம் சந்தேக நிவர்த்தி வேண்டுகிறேன்?

மகாபாரதத்தை வீட்டில் படிக்கலாம். தவறு கிடையாது. யாரோ வீண் சந்தேகத்தைக் கிளப்பி விட்டார்கள் என்று தோன்றுகிறது.

பாரதத்தை முதலிலிருந்து தொடர்ந்து படிக்கலாம். பயம் தேவையற்றது.

* வீட்டில் எலுமிச்சம் பழ மூடியில் விளக்குப் போடலாமா, செவ்வாய், வெள்ளி, ஞாயிறு தினங்களில் எந்தத் திசையில் விளக்குப் போட வேண்டும்? பலன் கிடைக்குமா?

எலுமிச்சம் பழ விளக்குகள் வீட்டில் போடக் கூடாது. கோயிலில்தான் போட வேண்டும். பலன் நிச்சயம் கிடைக்கும்.

• காலையில் தூங்கி எழுந்தவுடன் சுவாமி படங்களில் கண்விழிப்பது நல்லதா?

காலையில் படுக்கையில் எழுந்தவுடன் சுவாமி படத்தைப் பார்க்கலாம். பார்ப்பது நல்லது.

கோபுரம், சூரியன், சிவலிங்கம் பார்த்தல் நல்லது.

* அகத்திக் கீரையைத் துவாதசி தினம் தவிர, மற்ற தினங்களில் சமைக்கக் கூடாதாமே? இது உண்மையா?

துவாதசி தினம் மாத்திரம்தான் விஷ்ணுவுக்குப் பிரியமான அகத்திக் கீரையைச் சமையலுக்கு உபயோகிக்கலாம். மற்ற தினங்களில் அகத்திக் கீரையைப் பசுமாடுகளுக்குக் கொடுக்க வேண்டும். உயர்ந்த செயலும்கூட.

'ஆநிரைகளுக்கு ஒரு பிடியுணவு தருவீர்' எனத் தேவாரம்கூடப் பாடுகிறது.

* நான் தினந்தோறும் கந்தர் சஷ்டி கவசம் படித்து வருகிறேன். என்னை மணந்து கொள்ள நல்ல இடத்திலிருந்து வரன்கள் வந்து கொண்டிருக்கின்றன. ஆனால் திருமண நாள் குறிக்கும் கட்டத்தில்

  

திடீரென்று நின்று போய் விடுகிறது. இம்மாதிரி ஏழு இடங்கள் அமைந்து திருமணம் நின்று விட்டது. இந்த நிலை மாறி, திருமணம் கைகூட என்ன செய்ய வேண்டும்...?

ஸ்ரீ பவானி அம்மனைத் தினமும் வழிபட்டு வந்தால் தோஷம் விலகி, கல்யாணம் நடக்கும்!

* பூஜை அறையில் 'சௌந்தர்யலஹரி' சுலோகம் கூறி முடித்ததும், அதற்குரியவாறு தெரிவித்தபடி தான் நைவேத்தியம் செய்ய வேண்டுமா...?

சௌந்தர்லயஹரி சொல்லி முடித்ததும் நிவேதனம் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் இல்லை.

விசேஷமான பலனை எதிர்பார்த்தால் சுலோகம் கூறி முடித்ததும் நிவேதனங்கள் எல்லாவற்றையும் செய்ய வேண்டும்.

* வீட்டில் தேளைக் கண்டதும் 'விநாயகருக்குக் கொழுக்கட்டை நிவேதனம் செய்கிறேன்' என்று வேண்டுதல் செய்வது ஏதோ குறை செய்திருக்கிறோம் என்பதை நினைவூட்டுவதாக இருக்குமா...?

ஸ்ரீ விநாயகரை வழிபடுவதனால் இடையூறுகள் அகலும். தேள் கொட்டிவிட்டால் பின்னால் துன்பங்கள் வரும். அதனால்தான் தேளைக் கணடவுடன் துஷ்டஜந்து விலகிச் செல்ல விநாயகருக்குப் பிரியமான கொழுக்கட்டை வேண்டுதல் வழக்கமாயிற்று.

* என்னைப் போன்ற இளைஞர்கள் இந்து மதத்திற்காக என்ன தொண்டு செய்யலாம்...?

இந்து மதத்திற்குரிய சமூகத் தொண்டுகளில் இளைஞர்கள் ஈடுபடவேண்டும். பொதுத்

தொண்டுகளில், ஆலயங்களில் பழுதுகள் பார்க்கலாம். அமைப்புகள் இருப்பின் சேர்ந்து துப்புரவு செய்யலாம். பிரகாரத்தில் புதர்களை ஒழிக்கலாம்.

* புதிய வீடு கட்டி வருகிறேன். சமையலறைக்கு வாணம் தோண்டிய சமயம் நல்லபாம்பும், சாரைப் பாம்பும் வந்தனவாம். இரண்டு பாம்புகளையும் பூமி தோண்டியவர்கள் அடித்துக் கொன்று விட்டார்கள். நல்லபாம்பை அடித்துக் கொல்லக் கூடாது என்று சிலர் கூறினார்கள். இதற்கு நான் என்ன பரிகாரம் செய்ய வேண்டும்? மனக் கஷ்டம் தீர வேண்டும். வழி கூறுங்கள்...?

நல்ல பாம்பை அடித்தது பாவம்தான். அதற்காக வைதிகரை வைத்து சாந்தி செய்யுங்கள். அல்லது சர்ப்ப தோஷம் நீங்க அரச மரம் அடியில் நாகப் பிரதிஷ்டை செய்யுங்கள். தோஷம் நீங்கும். மனச் சஞ்சலம் தீரும்.

* என் வீட்டுக் குழந்தைகள் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்க ஸ்ரீ சரஸ்வதி தேவியிடம் என்ன தோத்திரம் கூற வேண்டும்...?

'சரஸ்வதி அந்தாதி' என்ற நூல் ஒன்று இருக்கிறது. மகாகவி கம்பர் பாடியது. அந்த நூலில் உள்ள தோத்திரங்களைக் குழந்தைகள் படிப்பதால் நல்ல கல்வி ஞானம் ஏற்படும்.

* நாம் எதை எழுதுவதற்கு முன்பும் பிள்ளையார் சுழி போடுகிறோம். இதற்கு ஏதேனும் முக்கிய காரணம் இருக்கிறதா?

'ஓம்' எனும் ஓங்கார ஒலியைச் சிறிய வடிவில் குறுக்கி எழுதுவதைத்தான் அது குறிக்கும். எதை

எழுதுவதற்கு முன்னாலும், கணக்கோ, கடிதமோ எதுவானாலும் சரி, பிள்ளையார் சுழி போடுகிறோம். இது பல்லாண்டுகளாக இருக்கும் நடைமுறை வழக்கமும்கூட.

• பூஜை விக்கிரகங்களுடன் 'பிளாஸ்டர் ஆப் பாரிசில்' செய்த ஆஞ்சநேயர் பொம்மையை வைத்து வழிபடுகிறேன். ஆஞ்சநேயர் சஞ்சீவி மலையை எடுத்து வருவது.

பெண் குழந்தைகள் உள்ள வீட்டில் இந்த ஆஞ்சநேயரைப் பூஜைக்கு வைக்க வேண்டாம் என்கிறாள் என் தோழி. குருவிடம் விளக்கம் கோருகிறேன்...?

'பிளாஸ்டர் ஆப் பாரிசில்' செய்துள்ளதைப் பூஜை செய்ய வேண்டாம். படத்தைப் பூஜை செய்யலாம்.

* வீடுகளில் 'ஆண்டி' வேடத்தில் இருக்கும் முருகன் படம் வைத்துப் பூஜிக்கலாகாது என்று கேள்விப்படுகிறேன். காரணம் அறியலாமா...?

முருகன் படம் மயில் தோகையுடன் இருந்தாலோ, அல்லது வள்ளி தெய்வானையுடன் கூடிய முருகன் படம் இருந்தாலோ பூஜை செய்யலாம்.

• வெள்ளெருக்கில் உருவாக்கப்பட்ட பிள்ளையாரை வீட்டில் வைத்து வழிபடலாமா?

வெள்ளை எருக்கினால் செய்யப்பட்ட பிள்ளையாரை வீட்டில் வைத்துப் பூஜை செய்வது மிகவும் நல்லது. எல்லாப் பாபங்களும் விலகும்.

* நல்லவனும் சில சமயங்களில் தீயன நாடுவதேன்?

தீயோர்களின் சேர்க்கையினால்.

* ஒருவனை எந்த நாளும் ஆபத்திலிருந்து காக்கக் கூடியது? எது?

எல்லாக் குணங்களும் நிறைந்த உயர்ந்த நண்பன்.

* பல மதத்தின் தலைவர்களும், மக்களுடன் இணைந்து வந்து சேவை செய்யும் அளவு பழகி வரும் பொழுது, இந்து மதத் தலைவர்கள் மட்டும் ஒதுங்கியே இருப்பது ஏன்?

அவசியம் எல்லா மக்களுடன் சேர்ந்து சேவை செய்ய வேண்டும். சிலர் அப்படிச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

* வேறு மதத்தவர்களை 'மனம் புண்படுத்தப் படும், என எண்ணும் அரசு, இந்து மதத்தினரின் முறைகளை மட்டும் எண்ணி உரிய கௌரவம் கொடுக்காதது ஏன்?

இந்து மதத்தினரிடையே ஒற்றுமை இல்லாததினால், ஓட்டு மொத்தமாக ஓட்டுக்களை இந்துக்களிடமிருந்து வாங்க முடியாது என்ற நம்பிக்கையினாலோ!

* வீட்டில் பூஜையில் படங்கள் எந்தத் திசையை நோக்கி இருக்க வேண்டும்?

நாம் வீட்டில் இறைவனை வணங்கும்போது தெற்கு நோக்கி வணங்கக் கூடாது. அதற்குத் தகுந்த மாதிரி எந்தத் திக்கு நோக்கி வேண்டுமானாலும் வைக்கலாம். இறைவனின் படங்களை வைப்பதற்குத் திக்கு நியமம் கிடையாது. வழிபடுபவர்களின் நீதியை உத்தேசித்துப் படங்களை வைக்க வேண்டும்.

• துளசிச் செடியிலிருந்து துளசி இலைகளைப் பூஜைக்குக்கூட பெண்கள் பறிக்கக் கூடாது என்கிறார்களே, இது சரியா? செவ்வாய், வெள்ளி, துவாதசி திதி போன்ற நாட்களில் துளசி பறிக்கக் கூடாது என்கிறார்கள். சுவாமிகளின் விளக்கம் தேவை?

துளசி பெண் தேவதையானதனால் பெண்கள் பறிக்கக் கூடாது. சனி, வெள்ளி, அமாவாசை, பௌர்ணமி துவாதசி நாட்களிலும் மற்றும் மாலை வேளைகளிலும் பறிக்கக் கூடாது.

• சுவாமி விளக்குக்கு என்ன எண்ணெய் ஊற்றி ஏற்றுவது நல்லது? கடலை எண்ணெய் ஊற்றினால் கடன் வரும் என்கிறார்கள். நல்லெண்ணெய் சனீஸ்வர பகவானுக்கு மட்டும்தான் போடலாம் என்கிறார்கள். விவரம் தேவை?

நெய்தீபம் ஏற்றுவது மிகவும் உயர்ந்தது. அடுத்து நல்லெண்ணெய் தீபம் ஏற்றலாம்.

• தர்மம் எது? அதர்மம் எது?

தர்மம் என்பது தனக்கேற்டட்ட கடமைகளைச் செய்வது. அதர்மம் என்பது தனக்கேற்பட்ட கர்மாக்களை விடுவது.

• சமூக வாழ்க்கை, ஏகாந்த வாழ்க்கை இவை இரண்டிற்கும் என்ன வேறுபாடு?

சமூக வாழ்க்கை கர்மயோகம், ஏகாந்த வாழ்க்கை ஞான யோகம்.

• சாஸ்திர ஞானத்தால் என்ன பயன்?

உண்மை அறிவு ஏற்பட உதவி செய்யும்.

• எந்தெந்த குணத்திற்கு மனிதன் அடிமையாகக் கூடாது?

காமம், கோபம், லோபம், மோகம், மதம், மாத்சர்யம், அகங்காரம் போன்ற தீய குணங்களுக்கு அடிமையாகக் கூடாது.

• கல்லூரி மாணவனாகிய எனக்கு சுவாமிகளின் அறிவுரை என்ன? கடவுளை நம்பி பக்தியுடன் வழிபடுபவர்கள் வறுமையில் வாடுகிறார்களே? ஏன்?

கல்லூரி மாணவர்களுக்கு 10 அம்ச திட்டம் ஒன்று வகுத்துக் கொடுத்து அதற்குப் பரிசும் சர்டிபிகேட்டும் அளிக்கப்பட்டு வருகிறது. விவரங்கள் தேவைப்பட்டால் முழு விலாசத்துடன் எழுதவும்.

கடவுள் பக்தி உள்ளவர்கள், இல்லாதவர்கள் பலரும் வறுமையால் வாடுகிறார்கள். கடவுளுக்கும் வறுமை வாழ்விற்கும் சம்பந்தமில்லை.

• மந்திரங்கள், ஜெபங்கள் இவற்றை 108 என்று வைத்திருப்பது ஏன்? கடவுள் ஒன்றே என்று கூறுகின்றோம். ஆனால் அவனுக்கு இத்தனை தெய்வ உருவங்கள் ஏன்?

குறைந்த பட்சம் 108வது செய்ய வேண்டும் என்பதற்காக 108 சொல்லப் படுகிறது! எத்தனை வடிவம் இருந்தாலும் இறைவன் ஓர் உருவம்தான்!

• கடவுளை எந்த முறையில் வழிபடுவது நல்லது?

கருணை வடிவமாக, தாய் வடிவமாக வழிபடுவது நல்லது.

* மனிதனுக்கு மறு ஜன்மம் உண்டா?

உண்டு.

சிவபெருமானைப் 'பித்தா பிறை சூடி' என்று அழைப்பது ஏன்?

திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர் என்ற மூவரில் சுந்தரரை இறைவனே, 'பித்தா' என்று அழைத்த தனால், சுந்தரர் இறைவன் தன்னைப் பாடுவதற்கு 'பித்தா' என்று அடி எடுத்துக் கொடுத்தாரென எண்ணிப் பாடியதாகும்.

* மகிழ்ச்சியான நேரங்களில் இறைவனை நினைக்காமல், துன்பம் அடையும் நேரங்களில் மட்டும் இறைவனை நினைப்பது ஏன்...?

மகிழ்ச்சியான நேரங்களில் நம்முடைய அகங்காரம் வந்து ஆண்டவனை நினைக்காமல் மறந்துவிடச் செய்கிறது.

துன்பம் வரும் காலங்களில் யாரும் உதவிக்கு வராத நேரத்தில் இறைவனே கதி என்ற எண்ணம் வருகிறது, பக்தி வளர்கிறது.

* பெண்கள் தோப்புக்கரணமிட்டு விநாயகரை வணங்கலாமா?

பாவனையாகத் தோப்புக்கரணம் போட்டுப் பெண்கள் வணங்கலாம்.

* சுலோகங்கள் சொல்வதற்கு 'மடி'யாகத் தான் இருக்க வேண்டுமா...? (சந்தேக நிவர்த்தி உங்கள் மூலம் பெற விரும்புகிறேன்)

தோத்திரங்கள் சொல்வதற்கு மடி தேவையில்லை. 'நான்காம்' நாளுக்குப் பிறகு 'மடி'யான காரியங்கள் செய்யத் தொடங்கலாம்.

* ஸ்ரீ ஆஞ்சநேயர் படத்தை வீட்டு வாசலில் தான் வைக்க விரும்புகிறேன். ஆனால் சிலர் கூடாது என்

கிறார்கள்—தங்கள் சொற்படி செய்வேன். பதில் கூறுங்கள்?

ஸ்ரீ ஆஞ்சநேயர் படத்தை வெளியில் வைக்க வேண்டாம். வீட்டுக்குள்ளேயே வைத்துக் கொள்ளவும்.

• இந்து மதத்தை மட்டும் எவரும் எப்படியும் கிண்டலும் கேலியும் செய்யலாமெனும் நிலை மாற, இந்துக்களாகிய நாம் என்ன செய்ய வேண்டும்...?

இந்துசமயத்தில் உள்ள சிறப்புயர் கருத்துக்களைச் சிறு குழந்தைகள் முதல் நாம் கற்றுக் கொடுத்து விட்டால், யாரும் பரிகசிக்கும் நிலை ஏற்படாது.

• ராமாயணத்தில், ராமர் தன்னைத் தெய்வ அவதாரமாகக் காட்டிக் கொண்டிருக்கிறாரா எந்த இடத்திலேனும்? எனது இந்தச் சந்தேகத்தை நீங்களே தீர்த்து வைக்க வேண்டுகிறேன்...?

ராமாவதாரத்தில் மானுட சுபாவத்தின் போக்கும், அதனுடன் சாதாரண தருமத்தின் விளக்கமும் சேர்ந்து வரும். இதைத்தான் ராமபிரான், ராம-ராவண யுத்தம் முடிந்து, சீதை அக்கினிப் பிரவேசம் செய்யும் சமயம் சொன்னார்:

'ஆத்மானம் மானுஷம் மன்யே
ராமம் தசரதாத்மஜம்'

'நான் மனிதன். நான் என்னைத் தசரதன் மகன் ராமன் என்கிற மனிதனாகத்தான் எண்ணி வருகிறேன்' என்றுதான் சொல்லியிருக்கிறார்.

• மனிதன் தான் பிறப்பு எடுத்ததன் முழுப் பயனை எப்போது எய்துகிறான்...?

மனிதன் தான் கவலைப்படாமல், எப்போதும் இருந்து கொண்டு, எமன் வரும்போது கூடப் பயப்படாமல் (சாவுக்கும் அஞ்சாமல்) ஆனந்த நிலையில் இருக்கிறானோ, அப்போது பிறந்ததன் பயனை அடைகிறான்.

• காலையில் கண் விழித்து எழுந்ததும் இறைவனை எப்படி வணங்குவது...? இரவில் படுக்கப் போகும் முன்பு எப்படி வணங்குவது...?

காலையில் உறங்கி எழுந்தவுடன் படுக்கையில் அமர்ந்த நிலையில் கடவுளை வணங்கி, 'இன்றைய பொழுது நல்லதாகக் கழிய வேண்டும்' எனப் பிரார்த்தனை செய்ய வேண்டும். இரவில் படுக்கும் முன்பு, சில நிமிடங்கள் அமர்ந்து 'இன்றைய தினம் எவ்வளவு தவறு செய்திருக்கிறோமோ அவற்றையெல்லாம் மன்னித்து விடும்படிக் கடவுளிடம் பிரார்த்தனை செய்ய வேண்டும்.

• ஸ்ரீ ஆதிசங்கரர் எங்கே முக்தி அடைந்தார்...? சங்கரரைப் பற்றிய சில நூல்களில் கேதாரத்தில் விதேக முக்தி பெற்றதாகவும் சொல்லப்படுகிறது. 'சங்கர விஜயம்' எனப்படும் நூலில், ஒரு குகையில் நுழைந்து கைலாசம் சென்றதாக ஒரு குறிப்பு. இன்னொரு வரலாற்றில் காஞ்சியில் முக்தி பெற்றதாகக் கூறப்படுகிறது.

ஸ்ரீ சங்கரரின் முக்தி விபரங்களைத் தாங்கள் தெரிவிக்க வேண்டுகிறேன்--?

ஸ்ரீ சங்கர பகவத்பாதரின் முக்தித்தலம் காஞ்சிபுரம் தான்.

ஸ்ரீ ஆதிசங்கரர் கேதாரத்தில் முக்தியடைந்தார் என்றால், ஸ்ரீ பரமேஸ்வரனிடம் பெற்ற ஐந்து

ஸ்படிக லிங்கங்களும், ஸ்ரீ சௌந்தர்யலஹரியும் எப்படிக் கிடைத்திருக்க முடியும்...?

ஆதி சங்கரர் பத்ரியிலிருந்து கைலாச மலையடி வாரம் சென்றார். அங்கிருந்து யோகமார்க்கத்தில் திருக்கைலாயத்தில் ஸ்ரீ பார்வதி பரமேஸ்வரனைத் தரிசித்தார். ஸ்ரீ பரமேஸ்வரனால் அளிக்கப்பட்ட ஐந்து ஸ்படிக லிங்கங்களை-(பெயர்கள்-யோக, போக, வர, முக்தி, மோக்ஷ லிங்கங்கள் என்பதாகும்) பெற்றார்.

ஸ்ரீ சங்கரர் அம்பாளைப் போற்றி இயற்றிய பாடல்களின் சிகரமெனக் கருதப்படும் ஸ்ரீ சௌந்தர்ய லஹரி, கைலாயத்திலிருந்து லோக குருவால் கொண்டு வரப்பட்டது. கைலாயத்திலிருந்து திரும்பிய ஸ்ரீ சங்கரர் திக் விஜயம் செய்து கொண்டு காஞ்சிபுரத்தில் சர்வக்ஞ பீடமேறினார்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் முக்தி பெற்ற சமாதி ஸ்ரீ காமாட்சி அம்மன் கோயிலின் இரண்டாவது பிரகாரத்தில் இருக்கிறது. ஸ்ரீ ஆதி சங்கரர் அமரத்வம் பெற்ற இடம் காஞ்சிபுரம். இதுதான் வரலாற்று உண்மையாகும்.

* எங்கள் ஊரில் புதியதாகக் கட்டிமுடித்த ஆலயத்தில், மூலவர் வலம்புரி விநாயகராகவும், உற்சவ மூர்த்தி இடம்புரி விநாயகராகவும் இருக்கலாமா...?

இப்படி அமைந்தால் தோஷம் ஏற்படுமா? சாந்தி செய்யலாமா...?

ஜகத்குரு இதற்கு விளக்கம் கூற வேண்டுகிறேன்?

மூலவர் எப்படி இருக்கிறாரோ அதே போலவே உற்சவ மூர்த்தியும் இருக்க வேண்டும்.

* உடல் ஊனமானவர்களுக்குத் தினமும் ஐந்து காசு தர்மம் கொடுப்பது, அனாதைக் குழந்தைகள் பள்ளி-ஆசிரமத்துக்கு முடிந்த தொகை தருவது இதில் உயர்ந்த தர்மம் எது...?

கைகால்கள் இழந்த ஊனமுற்ற மனிதர்களுக்கு உதவி செய்வது மிக உயர்ந்த தர்மம்.

பள்ளி, ஆசிரமங்களுக்கு உதவி செய்வது இரண்டாவது தர்மம்.

கைகால் ஊனமானவர்கள் உழைத்துப் பிழைக்க முடியாது. ஆதலால் அவர்களுக்குச் செய்வது சிறந்த தர்மம்.

* சில கோயில்களுக்குச் சென்று, அர்ச்சனை செய்யச் சொன்னால் சுவாமி அல்லது அம்பாளுக்கு அணிவித்த மாலையை உதிர்த்து அர்ச்சனை செய்கிறார்கள். அல்லது ஏற்கனவே அர்ச்சித்த புஷ்பங்களைத் தட்டில் எடுத்து வந்து மறுபடியும் அர்ச்சிக்கிறார்கள். இதைச் சுட்டிக் காட்டினால் பூசாரி, அர்ச்சகர்கள் தப்பு இல்லை என்கிறார்கள். உங்கள் விளக்கம்?

அதாவது அர்ச்சனைக்கு மலர்கள் தட்டுப்பாடு உள்ள கோயில்கள் என்று தெரிந்தால், நீங்கள் செல்லும்போது, புஷ்பங்கள் எடுத்து செல்லவும். இப்படி மற்றவர்களைப் பின் பற்றினால், பூசாரியோ அர்ச்சகரோ நிர்மால்ய மலர்களை எடுத்து அர்ச்சிக்கும் வாய்ப்பு ஏற்படாது.

* பூஜை அறையில் குத்து விளக்கு, சிறிய ஜோதி ஏற்றி வைக்கிறேன். இந்த இரண்டும் தானே அணைய விடலாமா...? பூட்டிக் கொண்டு வெளியே போகும் போது விளக்கை அணைத்துவிடுவது நல்லதா...?

பூஜை அறை விளக்கை இது வரை எரிந்தது போதும், இனி வேண்டாம் என்று தோன்று கிறதோ அப்போது இப்படிச் செய்யவும்.

இரண்டு சொட்டுப் பாலை தீபங்கள், குத்து விளக்கு அல்லது ஜோதி இரு பக்கவாட்டில் தடவி அணைத்து விடலாம்.

பல பெண்கள் இந்த வழியைத்தான் பின்பற்று கிறார்கள்.

❀ காந்தியடிகள் தீண்டாமை ஒழிப்புக்கு வாழ்நாள் முழுவதும் பாடுபட்டார். ஓரளவு ஒழிந்தது. இப்போது மீண்டும் தலைதூக்குகிறது. மேல்ஜாதி கீழ்ஜாதி என்று பேசுபவர்களைத் திருத்துவது...?

அனைத்து மக்களும் அவ்வப்போது பொது இடத்தில் ஒன்று கூடி வார வழிபாடு, பஜனைப் பாடல் பாடுவது, கோயில் உற்சவத்தில் தேர் இழுப்பது போன்ற பணிகளில் அதிகம் ஈடுபட வேண்டும்.

இவற்றை நம் இந்துக்கள் செய்து வந்தால் ஒற்றுமை வலுவடையும். தீமை சக்தியற்றுப் போகும்.

ஆன்மீக வழிகள் தவிர, ஜாதி ஒற்றுமைக்கு வேறு வழிகள் ஏற்பட முடியாது.

❀ 'சௌந்தர்யலஹரி' யைத் தினமும் முழுவதும் படிக்க இயலாத நிலை. அப்படியுள்ள நிலையில், சௌந்தர்யலஹரியின் முக்கியமான தோத்திரங்களைக் கூறினால், முழுவதும் தோத்திரம் கூறிய பலனை அடையலாமா...? தோத்திரங்கள் எவை என்று குருவான நீங்கள் தெரிவிக்க வேண்டுகிறேன்...?

படிக்கவோ, வேலைக்குச் செல்ல வேண்டியவர்கள், பாராயணத்துக்கு அதிக நேரம் எடுத்துக் கொள்ள முடியாதுதான்.

அப்படிப்பட்டவர்கள், சௌந்தர்யலஹரியில் முதல் ஸ்தோத்திரத்தையும், கடைசி ஸ்தோத்திரத்தையும் தினமும் தவறாமல் கூற வேண்டும். (படிக்க வேண்டும்) இந்த இரண்டும் எல்லாத் தோத்திரங் களையும் கூறிய பலன் கிடைத்துவிடும்.

* ஒரு தபால்கார்டில் ஸ்ரீராமஜயம் அதிகம் எழுது வோர்க்கும் போட்டி வைத்து, பரிசு தந்தேன். இதை நான் தொடர்ந்து செய்யலாமா...?

இது நல்ல தொண்டுதான். ராமநாமத்தை, பெருமைகளை விளக்கும் இந்தப் போட்டியைத் தொடர்ந்து நடத்த முயற்சிக்கவும்.

* விபூதியைக் குழைத்து நெற்றியில் இட்டுக் கொள்ளக் கூடாது என்று கூறுவது சரியா....? விபூதி யை அப்படியே இட்டுக் கொள்வதா...?

ஸ்நானம் செய்வதற்கு முன் திருநீறைக் குழைத்து இட்டுக் கொள்ளக் கூடாது.

நீராடிய பிறகு விபூதியை நீரில் குழைத்து இட்டுக் கொள்ளலாம். அதே போல மாலையில் நீரில் குழைக்காமல் இட்டுக்கொள்ளலாம்.

* கந்த சஷ்டி கவசத்தையும், கந்த குரு கவசத்தை யும் எத்தனை முறை கேட்டாலும் நெஞ்சமும் உடலும் சிலிர்க்கிறது. இதுதான் தெய்வ சக்தியா...?

ஆமாம்...! ஆமாம்...!

* பூஜை அறையில் ஸ்ரீசுப்ரபாதத்தைக் காலையில் குறிப்பிட்ட நேரத்திற்குள் பாட வேண்டுமென்று வரையறை உண்டா...?

ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம், ஸ்ரீ காமாட்சி சுப்ர பாதம், ஸ்ரீ குருவாயூரப்பன் சுப்ரபாதம்—இப்படி யான ஸ்ரீ சுப்ரபாதம் காலையில் 5 மணி முதல் 6 மணிக்குள் பாடுவது உன்னதமானது.

* முன்பு ஒருவரின் கேள்விக்கு உடம்பு சரியில்லாதவர்கள் குளிக்காமல் தோத்திரங்கள் சொல்லலாம் என்று பதிலளித்திருக்கிறீர்கள்.

ஆனால் 'கந்தர் சஷ்டி கவசம்' நூலில் ஆசாரத் துடன் அங்கங்கள் துலக்கிய பிறகு சொல்ல வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறதே—? விளக்கம் மறுபடி கூறுங்கள் ...?

மீண்டும் சொல்கிறேன். உடல் நலமில்லையானால் தோத்திரங்கள் சொல்லி இறைவனை வழிபட மிகுந்த ஆசாரங்கள் பார்க்கத் தேவையில்லை. கை, கால்கள் சுத்தம் செய்துவிட்டு நெற்றிக்கு விபூதி குங்குமம் இட்டுக் கொண்டு தோத்திரங்கள் கூறலாம்; வழிபடலாம்.

* திருமணமாகி இரண்டு வருடங்களுக்கு மேலாகியும் எங்களுக்குக் குழந்தைப் பேறு இல்லை. இதற்கு ஒரு வழி கூறி அருளவும்?

குழந்தைப் பேறு இல்லாதவர்கள், ராமேசுவரம் சென்று, நாகப்பிரதிஷ்டை செய்து வழிபடவும். எதிர்பார்த்தபடி பேறு கிடைக்கும்.

* என் கணவர் செய்யும் தொழிலில் புகழும், செல்வமும், பாக்கியங்களும் பெற என்ன வழிபாடு செய்ய வேண்டும்...?

எல்லா நன்மைகளும் பெற 'அபிராமி அந்தாதி' யைப் பாராயணம் செய்யவும்.

• பூஜை அறையில் பல மணி செலவிடும் தாய் அல்லது மனைவி கடமைகளிலிருந்து தவறலாமா?

கடமைகளிலிருந்து தவறாமல் இறைவனை வழிபடுதல் சாலச் சறந்தது.

• ஆண்டவனுக்குப் படைக்கும் பழங்கள் இதர நைவேத்தியங்களுடன் வெற்றிலை பாக்கு ஏன் வைக்கப்டட வேண்டும்...?

ஆண்டவனுக்கு நிவேதனம் செய்யும்போது, வெற்றிலை பாக்கு வைப்பது, உபசாரமாகச் சுபமாக வைக்கப்படுவதாகும்.

• எனக்குத் திருமணமாகி மூன்று ஆண்டுகளாகின்றன. என் திருமாங்கல்யம் இரண்டில் ஒன்று மிகவும் பெரிது. அது மெல்லியதாக இருப்பதால் நசுங்கி வடிவ அமைப்பு மாறிவிட்டது. அந்தத் திருமாங்கல்யத்தைச் சிறிதாகக் கனமாக மாற்றிக் கொள்ளலாமா? செய்வதால் தவறு ஒன்றும் ஏற்படாதா...?

பெண்கள் திருமாங்கல்யத்தைப் பழையதாக உள்ளதைப் புதிதாக மாற்றிக் கொள்ளலாம். அப்படித் தங்கத்தை மாற்றிச் செய்யும்போது, திருமாங்கல்யம் அணிந்த இடத்தில் மஞ்சளை மஞ்சள் சரட்டில் கட்டிக் கொள்வது நல்லது. மங்கலமானது.

• சில நாட்களில் அவசரத்தில் குளிக்காமல் சமையலை முடிக்கிறேன். அப்போது நான் காக்கைக்கு அன்னமிடலாமா...?

எப்போது சமையல் செய்தாலும் நாம் சாப்பிடுவதற்கு முன்னால் காக்கைக்கு அன்னமிட்டுவிட்டு உண்பது நல்லது.

* காலையில் சொல்ல வேண்டிய தோத்திரங்கள், மாலையில் சொல்ல வேண்டிய தோத்திரங்கள் என வேறு வேறு இருக்கின்றனவா...? நவக்கிரக தோத்திரங்கள் தினமும் ஒவ்வொன்றுதான் சொல்லணுமா...? தெளிவு படுத்துங்கள்...?

காலையில் ஸ்ரீ விஷ்ணுவைக் குறித்து தோத்திரங்களைக் கூறலாம். இதர தெய்வங்களை குறித்தும் சொல்லலாம். (காலை வழிபாடுகள் முக்கியமானது).

ஆனால் நவக்கிரக தோத்திரங்கள் எல்லாவற்றையும், எல்லா நாட்களிலும் சொல்லலாம்.

* நான் ஐயப்பன் படம் வரைந்து 'சரணம் ஐயப்பா' என எழுதி வந்தேன். இளம் பெண்கள் ஐயப்பன் சித்திரம் வரையக் கூடாது என்கிறார்களே? என் சந்தேகத்தைத் தீர்க்கவும்...?

ஐயப்பன், வரைந்து படம் வைத்துப் பூஜை செய்வது, விரதம் இருப்பது அவசியம் இல்லை.

* ஸ்ரீ விநாயகப் பெருமானுக்கு அர்ச்சனை செய்து முடித்த பிறகு, சதுர்த் தேங்காய் உடைப்பது நல்லதா?

சதுர்த் தேங்காய் உடைத்த பின்பு ஸ்ரீவிநாயகருக்கு வழிபாடு, அர்ச்சனை செய்வது நல்லதா?

முதலில் ஸ்ரீ விநாயகப் பெருமானுக்குச் சதுர்த் தேங்(சிதறு)காய் உடைத்துவிட்டுப் பிறகு வழிபாடும் அர்ச்சனையும் செய்வது உகந்தது.

* தமிழ் தெலுங்கு இதர மொழிகள் தோன்றியது பற்றி எனக்குச் சில சந்தேகங்கள். முதலில் தோன்றிய மொழி எது?

எல்லா மொழிகளும் ஆண்டவன் மூலம் தோன்றின. தமிழ் தொன்மையானது.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு' எனும் (முதல்) திருக்குறள் வாசகத்தின்படி தோன்றிற்று.

* சிவாலயங்களுக்குச் சென்றால் நந்தி முதலில் இருக்கிறார். அவரை வழிபட்டுப்பிறகு சிவபெருமானை வழிபாடு செய்ய வேண்டுமா?

எது முறையானது?

சிவாலயங்கள் சென்று நந்தியைப் பிரதிட்சணம் வந்து, சுவாமியைத் தரிசனம் செய்ய வேண்டும்.

அதன் பிறகு நந்தியின் இரு கொம்புகளினூடே சிவபெருமானைத் தரிசித்துவிட்டுப் பிறகு ஆலயத்திலிருந்து வெளியே வரவேண்டும்.

* பக்திப் படங்களில் குற்றம் செய்தவர்களைத் தெய்வம் உடனே தண்டிப்பதாகக் காட்டுகிறார்கள்.

நிஜ வாழ்க்கைக்கும், இன்று எடுக்கப்படும் சினிமாப் படங்களுக்கும் சம்பந்தமில்லையே?

'அரசன் அன்று கொல்வான், தெய்வம் நின்று கொல்லும்' என்னும் நீதிமொழி என்றும் பொய்க்காது!

குற்றம் செய்தவர்கள் சாமர்த்தியத்தால் தப்பித்தாலும், பிறகு அவர்கள் தண்டிக்கப்படுவார்கள்; தண்டனை பெற்றிருக்கிறார்கள்.

இதைத்தான் தெய்வத்தோடு அரசனையும் சேர்த்துச் சொன்ன பழமொழி.

* எங்கள் வீட்டில் நிறைய படங்கள். இருப்பதோ இரண்டு அறைகள். பூஜை செய்யும் அறையில்தான் படுத்துறங்க வேண்டியுள்ளது. மிகச் சிறிய சமயலறை.

பூஜை அறையில் குடும்பத்துடன் கூடிய படுக்கை அறையாக இருப்பதால் தெய்வக் குற்றம் ஏற்படுமா? ஒரு வழி கூறினால் ஆறுதல் அடைவேன்?

ஓர் அலமாரியில் திறந்து மூடும் கதவுகள் வைத்திருந்து தெய்வப் படங்களை, அதில் வைக்கவும். 'சுத்தமான' நேரத்தில் திறத்து வைத்து, கதவுகளைப் பிறகு மூடி விடலாம்.

* வீட்டில் பூஜை அறையில் பறக்கும் ஹனுமான் படம் இருந்தால், குடும்பம் கஷ்டப்படும், பறக்கும் என்கிறார்கள். (நாங்கள் மெலட்டூர் ஹனுமான்தாஸ் வெளியிட்ட படம் வைத்திருக்கிறோம்) எங்கள் சந்தேகம் நிவர்த்திக்கப்பட வேண்டுமே?

ஸ்ரீ ஹனுமான், பறக்கும் தோற்றத்தில் உள்ள படத்தை வைத்துக் கொள்ளலாம். ஒரு கஷ்டமும் வராது.

* துளசியை ஆண்கள் வழிபடலாமா?

துளசியை (மாடத்தை) ஆண்களும் வழிபடலாம்.

* வீட்டில் ஒரு பெண் கர்ப்பமாயிருக்கிறாள். இந்தச் சமயத்தில் புதிய கிணறு வெட்ட(எடுக்க)லாமா?

இப்படிப்பட்ட நேரத்தில் கிணறு தோண்டக் கூடாது!

* எங்கள் வீட்டு வாசலில் பெரிய நெல்லி மரம் இருக்கிறது. வீட்டு வாசலில் நெல்லி மரம் கூடாது என்கிறார்களே, சரிதானா?

உடல் ஆரோக்கியத்துக்கு மிக நல்லது நெல்லிக் காய். ஆயுர்வேத மருந்துகள் கூட நெல்லியிலிருந்து தயாரிக்கிறார்கள்.

நெல்லி மரம் வீட்டு வாசலில் இருக்கலாம். ஒரு குறையும் வராது.

* பித்ரு காரியங்களுக்குப் பித்தளை, வெள்ளி தவிர மற்ற எந்த உலோகத்தாலான பாத்திரங்களை உபயோகிக்கலாம்?

எவர்சில்வர் பாத்திரங்கள் தவிர, இதர உலோகத் தால் ஆக்கப்பட்ட பாத்திரங்களை பித்ரு காரியங் களுக்கு உபயோகிக்கலாம்.

* தினமும் வீட்டில் ஐந்து முகம் உள்ள தீபத்தைத் தான் ஏற்றவேண்டுமா? காமாட்சி விளக்கு வைத்து சுவாமி கும்பிடலாமா?

ஐந்து முகம் கொண்ட குத்து விளக்கை, வசதியிருந் தால் தினமும் ஏற்றி வரலாம். காமாட்சி விளக்கு ஏற்றி வைத்தும் வழிபடலாம்.

குத்து விளக்குத்தான் தினமும் ஏற்ற வேண்டும் என்று கட்டாயமில்லை, தினமும் வீட்டில் விளக்கு ஜோதி ஒளிவிட வேண்டும்.

* ராமாயணத்தில், ஸ்ரீராமரிடம் நாளை உனக்குப் பட்டாபிஷேகம் என்றபோதும் சரி; நாளை 14 ஆண்டு கள் கானகம் செல்ல வேண்டும் என்ற போதிலும் முகம் செந்தாமரையாக இருந்ததாம். ஆனால் எனக்குச் சிறு ஏமாற்றங்கள் ஏற்பட்டால்கூட அதிர்ச்சி, கவலை முகத்

தில் விகாரம் தட்டுகிறது. நான் எப்படிச் சோதனை களைச் சமாளிக்க வேண்டும்?

ஸ்ரீராமன், சக்கரவர்த்தித் திருமகன். நாடாளும் மகுடாபிஷேகம் நடைபெறாமல், மரவுரி தரித்துக் கானகம் சென்றார். தன்னைக் கடவுள் என்று காட்டிக் கொள்ளாமல், மனிதனாக இன்ப துன்பங் களை ஏற்று, முடிவில் பட்டாபிஷேகம் அடையப் பெற்றார்.

மனிதன் எப்படி வாழ வேண்டும் என்பதற்கு அவர் வழி காட்டினார். ஒரு சொல், ஒரு வில், ஓர் இல் (மனைவி) என்று அவரைச் சொல்லி, ஸ்ரீ தியாக ராஜ சுவாமிகள் பாட்டுப் பாடியிருக்கிறார்.

உங்களுக்குச் சோதனைகள் வரும்போது, ஸ்ரீராமர் உருவை மனதில் நினைத்துக் கொள்ளவும். துன்பங்களை எளிதில் வென்றுவிடலாம்.

* வீட்டில் ஸ்ரீ அஞ்சநேயர் படம் வைத்துப் பூஜித்து வரலாமா? ஒரு மூத்த வயது பெண்மணி சந்தேகம் எழுப்பிவிட்டார், குழப்பத்தைத் தெளிவிக்கவும்?

ஸ்ரீ அஞ்சநேயர் சிரஞ்சீவி. அவர் செய்தவை அனைத்தும் ஜெயம் அடைந்தவை. அவர் படத்தை வைத்துப் பூஜை செய்யலாம்.

* நாங்கள் நடத்தி வந்த தொழில் நல்ல லாபத் துடன் இருந்து வந்தது. திடீரென்று லாபம் இல்லாது, என் கணவருக்கும் ஹார்ட் அட்டாக் வரவே, ப்ரச்னம் (ஜோசியம்) வைத்ததில், யாரோ செய்வினை வைத்து விட்டதாகத் தெரிய வந்தது.

அதை எடுத்து விட்டோம். மறுபடியும் 'ப்ரச்னம்' வைத்துப் பார்த்ததில், திருப்பி செய்வினை வைத்து

இருப்பதாக வந்தது. வியாபாரம் நன்றாக நடக்க வில்லை. இந்தக் குறை நீங்க ஸ்வாமிகள் வழி சொல்ல வேண்டும்?

இந்திராக்ஷி ஸ்தோத்திரம், சிவகவசம் முதலிய தோத்திரங்களைக் குடும்ப க்ஷேமத்திற்காக ஒரு கோவிலில் வைத்துப் பாராயணம் செய்யவும். கஷ்டங்கள் நீங்கும்.

* பாரத நாட்டின் இளைஞர்களின் வேலை யில்லாத் திண்டாட்டத்தை எப்படி ஒழிக்கலாம்?

அவரவர் சொந்த முயற்சியாலே தொழிலைக்கற்றுக் கொண்டு முன்னேற வழி தேட வேண்டும். கை கட்டிச் சேவகம் செய்ய முயல்வதை மறக்க வேண் டும். உதாரணம் ஜப்பான் போன்ற நாடு.

* காலையில் எழுந்தவுடன் சொல்ல வேண்டிய தோத்திரம், இரவில் படுக்கப் போகும்போது சொல்ல வேண்டிய தோத்திரங்களைப் பெரியவர்கள் தெரிவிக்க வேண்டும்?

காலையில் நாராயணனின் நாமத்தையும், இரவில் சிவ நாமத்தையும் உச்சரிக்க வேண்டும்.

* மனச் சஞ்சலம் தீர என்ன பூஜைகள் செய்ய வேண்டும்?

ஏதேனும் ஒரு தெய்வத்திடம் உறுதியான நம்பிக்கை கொண்டு வழிபட வேண்டும்.

இந்தியாவில் பெண்களின் தற்போதைய நிலைமை பற்றிச் சொல்வீர்களா?

வெளி நாட்டு ஆபத்திலிருந்து நாட்டைக் காக்க ராணுவம் எவ்வளவு அவசியமோ, அதுபோல

  

வீட்டுப் பொறுப்பைக் காக்க ராணுவம் போலக் கட்டுப்பாட்டுடனும் சுதந்திரத்துடனும் பெண்கள் விளங்க வேண்டும்.

* விலைவாசிகள் பயங்கரமாக ஏறிவரும் இந்நாளில், ஆடம்பரமாகச் செலவிட்டுத் திருமணம் செய்ய வேண்டுமா என்ன? (பணக்காரர்களுக்குத்தான் இக் கேள்வி)

ஆடம்பரத்தைத் தவிர்க்க வேண்டுமென்பது பேச்சளவிலேயே நிற்கிறது. இதைச் செயல் படுத்தும் பொறுப்பு பெண்களுக்கே.

* குடும்பத்தின் வறுமை நீங்கத் தினமும் சொல்ல வேண்டிய தோத்திரம் ஒன்று தெரிவியுங்கள்?

ஆதி சங்கரர் இயற்றிய கனகதாரா ஸ்தோத்திரம் வறுமை நீங்கப் போதுமானது.

* காலத்தால் அழிக்க முடியாதது எது?

சத்தியம்.

* பெண்கள் எதைப்பற்றிப் பேசக் கூடாது?

எதையும் அளவுக்கு மிஞ்சி பேசக் கூடாது.

* பெண்களுக்கு மன நிறைவைத் தரும் விஷயம் எது?

கணவனின் நடவடிக்கை.

* என் மகன் கல்வியில் சிறந்து விளங்க வேண்டுமானாலும், எந்தக் கடவுளை என்ன தோத்திரம் சொல்லி, பூஜை செய்ய வேண்டும்?

சிறப்பாகக் கலைமகளின் அருளைப் பெறுவதே நல்லது.

  

* குடும்பத் தலைவன் மனைவி மக்களிடம் அன்பும், ஆசையும் இல்லாமல் இருப்பதை நிவர்த்திக்கப் பெரியவர்கள் ஒரு வழி சொல்ல வேண்டும்?

கடவுள் பக்தி ஒன்றே அவனை நல்வழிப்படுத்தும் அன்பே கடவுள் அல்லவா?

* கிருகஸ்தன், தினமும் இரவில் ('சுவான பலி' தருவது) நாய்க்குச்சோறு வைக்க வேண்டுமென்று ஒருவர் சொல்லக் கேட்டேன். அதற்கு விளக்கம் வேண்டுகிறேன்?

ஜீவகாருண்யத்துக்கு எடுத்துக் காட்டாக இந்த நற்செயல் விளங்கும்.

* பெண்களும் காயத்ரி மந்திரம் சொல்லலாமா?

பெண்களுக்குக் காயத்ரி ஜபத்துக்குப் பதில் பஞ்சாட்சரம், சஷ்டாட்ச்ரம் போன்ற மந்திரங்களை விதித்திருக்கிறார்கள் மகான்கள்.

ஏழைகளும் செய்யத் தக்க தர்மங்கள் எவை...?

சக்திக்குத் தகுந்தபடி அன்னதானம் வழங்குவது. வீடு தேடி வந்தவருக்கு நம் உணவில் ஓரளவு அளிக்க வேண்டும்.

* சூரியன் உதயமாகிக் கொண்டிருக்கும்போது நமஸ்கரிக்க வேண்டுமா? முழுச் சூரியனும் வெளிப் பட்டதும் நமஸ்கரிக்க வேண்டுமா?

காலையில் உதயத்துக்கு முன்பும் மாலையில் அஸ்தமிக்கும் சூரியனைக் காணும்போதும் நமஸ்கரிக்க வேண்டும். (காணாமல் கண்டுகொண்டு) தாமதமானாலும் நமஸ்கரிப்பதை விட்டுவிடக் கூடாது.

* மனிதனை எப்போதும் காத்து வருவது எது?

அடக்கம்!

* மனதை எப்படி ஒரு நிலைப்படுத்துவது?

தினசரி தியானம் செய்து வருவதாலும், முறை யாகப் பிராணாயாமம் செய்து வருவதாலும் நல்ல உணவு உட்கொள்ளுவதாலும் மனதை ஒரு நிலைப் படுத்தலாம்.

* இராமாயணத்தில் முதற் காண்டத்திலும் ஐந்தாவது காண்டத்திலும் தெய்வப் பிறவியாகச் சித்தரிக்கப்படுகிறான் கௌசல்யா பெற்றெடுத்த கோதண்டராமன். ஆனால் மற்ற காண்டங்களில் மானிட வீரனாகச் சித்தரிக்கப்பட்டிருப்பது ஏன்?

ராமன் சிறு குழந்தைப் பருவம்வரை தன்னை அவதாரமாக நினைக்கிறான். வளர்ந்ததும் ஒரு வீர புருஷனாகி விடுகிறான். பல கட்டங்களில் 'நான் மனிதன், நான் மனிதன்' என்கிறார்.

ராவணன் தன்னை கடவுள்கள்-தேவர்கள் யாராலும் வெல்லக் கூடாது என வரன் வாங்கி னான். ஆனால் மனிதனால் என்று கேட்கவில்லை. எனவேதான் ராமன் மனிதனாக வந்தார். தன்னை மனிதனாகவே காட்டிக் கொண்டு ராவணனை வென்றார்.

* 'இல்லாதான்' என்ற பதம் யாரைக் குறிப்பிடு கிறது?

யாருக்கும் மனதால்கூட நல்லது செய்ய விரும்பாத வன், நினைக்காதவனைத்தான் இது குறிப்பிடும்,

  

● தமிழ்நாட்டில் ஆன்மீகம் தழைத்து இருந்து வருகிறது. ஆனாலும் ஆட்சி நாத்திகம் படைத்தவர்களிடம் தானே இருக்கிறது?

முன்பு சொல்லுவார்கள். 'அரசன் எவ்வழி மக்கள் அவ்வழி' என்பார்கள், இப்போது மக்களாட்சி. ஆனால் பெரும்பாலான மக்கள் தெய்வ நம்பிக்கை உடையவர்கள்தான். தனிப்பட்ட முறையில் ஆட்சியில் இருப்பவர்கள் கூடக் கடவுள் பக்தி உடையவர்களாகத்தான் இருப்பார்கள்.

● நீராடிப் புதிய வஸ்திரம் தரித்துப் பூஜை அறையில் உட்கார்ந்திருக்கும்போது, குழந்தைகள் படுக்கையிலிருந்து எழுந்து வந்து மடியில் உட்காருகிறது. இது பரவாயில்லையா?

அன்புடன் எதைச் செய்தாலும் அது சரியானது. குழந்தை உட்காருவதால் தப்பில்லை.

● தினசரி தியானம் செய்யக்கூடிய நேரங்கள் எப்போது அமைந்திருக்க வேண்டும்?

காலையும், மாலையும்.

● குடும்பக் கட்டுப்பாட்டை இந்தியாவில் எல்லா மதத்தவர்களும்தானே பின்பற்ற வேண்டும்? இந்துக்களுக்கு மட்டுமே என்று வலியுறுத்துவது சரியா?

எந்த மதமும் பிறப்பைத் தடை செய்யவில்லை. இந்தியாவில் பொருளாதார நிலையை உத்தேசித்து பிரசாரமும் செய்யப்படுகிறது. ஆனால் இதை இந்துக்கள் குடும்பநிலைக்கேற்றபடி கட்டுப்பாடு செய்து கொள்கிறார்கள்.

மற்ற மதத்தவர்கள் செய்து கொள்வதில்லை,

குடும்பக் கட்டுப்பாடு இந்தியாவில் எல்லோரும் செய்து கொள்ள வேண்டுமென்று அரசாங்கம் வற்புறுத்துகிறது.

• என் மகன் பரம துஷ்டனாக இருக்கிறான். என் கணவன் இல்லை. அவன்தான் குலவிளக்கு. அவனை நல்வழிப்படுத்த வேண்டும்... அதற்கு நான் என்ன பூஜை செய்யலாம்? விரதம் மேற்கொள்ளலாம்?

நல்ல உபதேசங்களால், இதமான சொற்களால் வழிப்படுத்தலாம். ஸ்ரீ ஆஞ்சநேய ஸ்வாமியை வழி பட்டு வந்தால் பிள்ளை நல்லவனாகி விடுவான்.

* தாய்மை அடைந்த பெண், ஐந்து மாதங்களாகி விட்டால் ஆலயங்கள் செல்லக் கூடாதா, தேர் திருவிழாவைப் பார்க்கக் கூடாதா, விளக்கம் வேண்டு கிறேன்?

கர்ப்பிணிப் பெண்கள் நாலு பேர் கண்களில் படக் கூடாது என்பதாலும், 'கண் திருஷ்டி விழலாம்' என்பதாலுமே, நாலுபேர் கூடும் கோயில் திருவிழா தேர்த் திருவிழாவிற்கு வரக் கூடாது என்பார்கள். மலையேறுவதுகூட கூடாது என்று வரையறுத்திருக்கிறார்கள்.

• சில முயற்சிகள் வெற்றி அடைய இறைவனிடம் நேர்ந்து (பிரார்த்தனை செய்து) கொள்வதும், விசேட அர்ச்சனை, அபிஷேகம், தேங்காய்கள் உடைத்தல் முதலியன, 'லஞ்சம்' அளிப்பது போல இருக்கிறதே? சுவாமிகள் விளக்க வேண்டும்?

லஞ்சம் கொடுத்தால் அது திரும்பாது. ஆனால் ஆண்டவனுக்கு அபிஷேகம் அர்ச்சனை செய்தால் பிரசாதம் மூலம் நமக்குத் திரும்பிவரும். இது எப்படி லஞ்சமாகும்? இப்படி ஒப்பிடுவதே சரியாகாது.

 

• வெகு நாட்களாக வழிபட்ட மண் விக்கிரகங்கள் (பொம்மைகள்) பின்னமடைந்துள்ளன. அதைப் பூஜிக்கலாகாது என்கிறார்கள். உடைந்தவற்றை என்ன செய்யவேண்டும்?

இதைக் கிணற்று ஜலத்திலோ அல்லது குளம் ஆறு சமுத்திர ஜலத்திலோ சேர்த்து விடலாம்.

• கிறிஸ்துவர்களுக்கு பைபிளும்; இஸ்லாமியர்களுக்குத் திருக்குரானும் மறை நூல்களாக இருக்கின்றன.

நமது இந்துக்களுக்கு மறைநூல் எது?

பகவத்கீதையும் — திருக்குறளும்.

• ஒரு பணக்காரர் ஒரு மனிதரிடம் காட்ட வேண்டிய அன்பையும் மதிப்பையும் ஒரு நாயிடம் காட்டுகிறார். இது வேடிக்கையும் வேதனையும் தருகிறதே?

மனிதனிடம் அன்பு காட்ட வேண்டும். மறந்து விடாமல் மற்ற உயிர்களிடத்திலும் அன்பு காட்ட வேண்டும்.

• மரண பயம் மனிதனுக்கு எப்போது ஏற்படுகிறது?

இந்தக் காலத்தில் யாருக்கும் மரணபயம் இருப்பதாகத் தெரியவில்லை. அவரவர்கள் தங்கள் விருப்பம்போல நடந்து கொள்கிறார்கள்!

• ஏழை எளிய மக்களும் செய்யக் கூடியதான தருமங்கள் எவை?

கிடைக்கும் பொருளில் சிறிதளவாவது பசிக்கிறவர்களுக்கு அளிப்பது; நமக்கு இறைவன் அளித்

திருக்கும் உடலால் உபகாரம் செய்து, உண்மை யாக நடப்பது இது போன்றவை.

* கெட்ட கனவுகள் அடிக்கடி எனக்கு இரவில் வருகின்றன. கெட்ட சொப்பனங்கள் பலிக்காமலிருக்க வழிகள் உண்டா? தோத்திரங்கள் உள்ளனவா?

ஆஞ்சநேயரை வழிபடும் தோத்திரங்களைச் சொல்லி வந்தால் கெட்ட சொப்பனங்கள் வராது; வந்தாலும் பலிதமாகாது. தோத்திரங்களில் ஒன்று;

''புத்திர் பலம் யசோதைரியம்
நிர்பயத்வ மரோகதா
அஜாட்யம் வாக்படுத்வம்ச
ஹனூமத் ஸ்மரணா த்பவேத்!''

* திருமணம் நடைபெறுகையில், தாலி முடியும் போது 'மூன்று முடிச்சு' போட வேண்டுமென்ற தத்துவத்தின் உண்மை விளக்கத்தைக் கூறுங்கள்?

இந்து சமய முறைப்படி நடக்கும் திருமணங்களில் தாலி முடிதல், சப்தபதி முதலியன நடைபெறும்.

தாலி முடிந்து மணமகளின் காலை ஏழு அடிகளை எடுத்து வைத்தால்தான் திருமணம் நடைபெற்றது என்று அர்த்தம். அதாவது கணவன் மனைவி ஆகிவிட்டார்கள் என்று உறுதி செய்யப்படு கிறது.

தாலிகட்டும்போது மூன்று முடிச்சுக்கு விளக்கம்—'விழிப்பு நிலை, தூக்கநிலை, கனவு நிலை' இந்த மூன்றிலும் 'நீ என் மனைவி, நான் உன் கணவன்' என்று மூன்று நிலைகளிலும் நினைவில் நிலைத்

திருக்க வேண்டும் என்றுதான் மாங்கல்யம் முடியப் படுகிறது.

இன்னும் பல அர்த்தம் சொல்லலாம், — அந்த அனைத்தும் இந்த மூன்றில் அடங்கும்.

* அஷ்டலட்சுமியையும் ஒரே படமாக வைத்துப் பூஜிக்கக் கூடாதாமே, —என் தோழி சொல்கிறாள். இது சரியா? நான் அஷ்டலட்சுமி படத்தை வைத்துத் தினமும் பூஜிக்கிறேன். சுவாமிகளின் விளக்கம்தான் எனக்குத் துணை புரியும்.

ஒரே லட்சுமிதான் அஷ்ட சக்திகளாக, அஷ்ட லட்சுமிகள் உருவங்களாகத் தோன்றுகிறாள். ஒன்றும் எட்டும் ஒன்றுதான். தாராளமாக நீங்கள் பூஜை செய்து வரலாம்.

* வில்வ தளத்தைத் தனித் தனியாக மரத்திலிருந்து பறிக்கக் கூடாது என்று ஒரு பெரியவர் என்னிடம் சொன்னார். வில்வம் எப்படிப் பறிக்க வேண்டும்?

இறைவனை அர்ச்சிக்கும் வில்வ தளத்தை மூன்று மூன்றாகச்சேர்ந்து இருக்கும்படி பறிக்க வேண்டும் மரத்தில் பறிக்கும் போது கூரான இரும்புக் கத்தியையோ அல்லது வேறு ஆயுதங்களையோ உபயோகித்தல் கூடாது.

பித்தளையாலான தகடால் பறித்தல் சிறந்தது. அர்ச்சிக்கும் தளத்தை மட்டும் காம்பு நீக்கி, தனித் தனியாக மூன்று மூன்றாகப் பிரித்து எடுக்கவும்.

* ஆலய வேண்டுதலில் அங்கப் பிரதட்சணம் செய்ய முடியாதவர்கள் அடிப்பிரதட்சணம் செய்தால் போதுமா?

இறைவன் பிரார்த்தனைக்காக அங்கப்பிரதட்சணம் செய்ய இயலவில்லையென்றால், அடிப் பிரதட்சணம் செய்யலாம். தடையில்லை.

* இன்று நமது பாரத நாடு எந்தத் திசையில் சென்று கொண்டிருக்கிறது?

யார் சொல்லுக்கும் கட்டுப்படாத வகையில் சென்று கொண்டிருக்கிறது!

* எல்லாவற்றையும் வெல்லக் கற்றுக் கொண்ட மனிதன் வெல்ல முடியாமல் தவிப்பது எது ஒன்றில்?

ஆசையில்!

* சிவன் கோவிலுக்குச் சென்றால் எத்தனை முறை பிரகாரம் வலம் வர வேண்டும்?

முறையே விநாயகர், முருகன், திருமால், அம்பாள் ஆலயங்களுக்குச் சென்றாலும் திருச்சுற்று வரும் முறைகளைப் பெரியவர்கள் மூலம் அறிய விரும்புகிறேன். பதில் அருளுங்கள்?

எந்தக் கோயிலாக இருந்தாலும் மூன்று முறை வலம் வர வேண்டும். (அதாவது திருச்சுற்று)

சிவன் கோயிலில் நந்திக்கு வெளியே அனைத்து தெய்வத் திரு உருவங்களையும் நினைத்து நமஸ்கரித்தல் வேண்டும்.

* பக்தர்கள் கோவில்களில் வழிபட்ட பிறகு பிரகாரங்களைச் சுற்றி வருகிறார்களே, அதன் நோக்கம் என்ன?

பக்தர்கள் தங்கள் குறைகள் நீங்கக் கோவிலை வலம் வருகிறார்கள்.

* இல்லற தர்மத்தைப் பெரியவர்கள் எனக்குக் கூற வேண்டுகிறேன்?

கணவனுக்கும் குழந்தைகளுக்கும் தேவைகளை அறிந்து அன்புடன் அளித்து வருவது, உண்மை நெறிகளை எப்போதும் கடைப்பிடிப்பது.

* பெண்கள் அதிகமாகத் துறவறத்தை மேற்கொள்வதில்லையே, காரணம் என்ன?

பெண்கள் தங்கள் வாழ்க்கையின் ஆசைகளையெல்லாம் துறக்கலாம். அப்படி அனைத்தையும் துறந்து துறவறத்தை மேற் கொள்ள பெண்கள் யாரும் முன்வருவதில்லை. பெண்கள் துறவறத்தை மேற்கொள்ள வேண்டும் என்பதற்குக்கூட எங்கும் ஆதாரம் கிடையாது என்றும் சொல்வேன்.

* செல்வங்களில் பெரியது எது?

உலக வாழக்கையில் குழந்தைச் செல்வம், பேரின்ப வாழ்க்கையில் 'மோட்ச சாம்ராஜ்யஸ்ரீ'.

* முருகன் சந்நிதியில் நான் அதிக நேரம் நின்று தோத்திரங்கள் சொல்லி வழிபடுகிறேன். ஆனாலும் என் துன்பங்கள் குறையவில்லை. முருகன் சோதனைகள் செய்த பிறகே அருள் புரிவானா?

நம்முடைய வினை நம்மைத் துன்பப்படுத்திக் கொண்டுதான் இருக்கும். பக்தியுடன் முருகனை வழிபட்டால் அந்த வினைகள், துன்பங்கள் குறையும். கூடுவதற்கில்லை.

* வணக்கத்திற்குரிய ஸ்ரீஜயேந்திர சுவாமிகளுக்குச் சிறைக் கைதி எழுதுகிறேன். எனக்குத் தங்களிடமிருந்து சில பக்திப் புத்தகங்கள் வேண்டும். அனுப்புவீர்களா?

ஆகா! மங்கை காரியாலயம் மூலம் புத்தகங்களை அனுப்பி வைக்கிறேன்.

(அனுப்பப்பட்டது)

* இந்தக் கொடிய வரதட்சணைக்கு ஒரு முடிவு காலம் வரவே வராதா?

திருமணமான ஒவ்வொருவரும் நினைத்துக் கொண்டால், திருமணமாகாமல் உள்ள பெண்களின் இந்தப் பிரச்சனைக்கு, வரதட்சணைக் கொடுமைக்குக் கட்டாயம் விடிவுகாலம் உண்டு.

* நீண்ட நாளாக எனக்கு இதுபற்றி அறிய ஆவல்.

இந்துக்கள் வீட்டில் விசேஷமான நாட்கிழமைகளிலும், திருமணம் போன்ற பல சுபமான நிகழ்ச்சிகளுக்கும் மாவிலைத் தோரணங்கள் கட்டுகிறார்கள்.

மற்ற இலைகளுக்கு இல்லாத முக்கியத்துவம் மாவிலைக்குத் தரப்பட்டிருக்கிறதே, என்ன காரணம்?

மாவும், தென்னையும் மங்கலப் பொருளாக—திரவியங்களாகக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

மற்ற மரங்களும் உத்தமமானவைகள்தான்.

ஆனாலும் மங்கலப் பொருள், திரவியங்கள் என்பதாலேயே மாமரத்தின் இலையையும், தென்னங் குருத்தையும் தோரணமாகக் கட்டுவிக்கப்படுகிறது.

வழிவழியாக வந்த நல்ல வழக்கங்களினால், நம் முன்னோர்கள் செய்வித்தவை இன்று நாமும் பின்பற்றிச் செய்கிறோம். செய்து வருவோம்.

* ஸ்ரீ பிள்ளையாருக்குத் துணைவி உண்டா? இருப்பின் பெயர் என்ன?

ஸ்ரீ [illegible]

பிள்ளையாரின் துணைவி வல்லபை.

* ஸ்ரீவேங்கடாஜலபதிக்கு 'ஏழுமலையான்' என்ற பெயர் எதனால் ஏற்பட்டது?

ஸ்ரீ நாராயணன் ஏழுமலைகளுக்கு மேல் இருப்பதால் அந்தப் பெயர் வழங்கலாயிற்று.

* ஒரு பெண், தன்னைவிட 7,8 வயது சிறியவரை மணக்கலாமா?

கூடவே கூடாது! தன் வயதுக்கு மேல் குறைந்தது ஒரு நாளாவது பெரியவனாக இருக்கலாமே தவிர; குறைந்த வயதுள்ள ஆணை, ஒரு பெண் மணக்கக் கூடாது.

* கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையிலுள்ள பாலம் கட்டப்படுவது மனிதனின் பக்தியினாலா, சக்தியினாலா?

இறைவன் அருளால் கிடைக்கும் சக்தியால், மனிதனின் பக்தி வளருகிறது.

* அமாவாசை போன்ற நாட்களில் முடி வெட்டிக் கொள்ளுதல், முக சவரம் (ஷேவிங்) செய்து கொள்ளுதல் கூடாது என்கிறார்களே, ஏன் என்பதைத் தெரியப்படுத்துங்கள்?

மாதம் ஒரு முறை வரும் அமாவாசை நாள், பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்வதற்குரிய நாளாகும். அதனால் அன்று புண்ய தினமாகக் கருதி முடி வெட்டிக் கொள்ளுதலும், முகச்சவரம் செய்து கொள்ளுதலும் கூடாது.

* கருணாமூர்த்தி என்று கடவுளைச் சொல்கிறோம். அப்படிப்பட்ட கருணாமூர்த்தியான கடவுளர்

களின் கையில், வேலும், வில்லும், அம்பும் இருப்பது இழிவுபடுத்துவதாகாதா...? ஆயுதம் தெய்வங்களிடம் இருப்பதன் தாத்பரியம் என்ன?

கடவுள் கருணாமூர்த்திதான்— அதில் யாதொரு சந்தேகமும் வேண்டாம். கையில் ஆயுதபாணியாக தெய்வங்கள் தோன்றுவது; தீயவர்களை அழிப்பதற்காகத்தான் ஆயுதங்களை ஏந்தியுள்ளார் என்று பொருள்.

எந்த வழியிலும் திருந்தாத மகாக்கொடியவர்களுக்கே, ஆயுதம் பயன்படுத்தப்பட்டது.

• தமிழில் அர்ச்சனை செய்வதுபற்றித் தங்களின் மேலான கருத்தை அறியலாமா?

தமிழிலும் இறைவனை அர்ச்சனை செய்யலாம்.

• இரவில் நித்திரையில் கெட்ட கனவுகள் வருகின்றன. இதற்கு எந்த மந்திரங்களை உச்சரித்தால் கெட்ட கனவின் பலன்கள் ஏற்படாமல் தடுக்கலாம்?

இரவில் தூங்குவதற்கு முன்பு, ஸ்ரீ ஆஞ்சநேய பகவானைத் தியானித்து, தோத்திரங்கள் சொல்லி விட்டுத் தூங்கலாம்.

'உத்தாரணோ துஷ்க்ருதுஹா;
புண்யோ துர்ஸ்வனப்நாசன;

என்று 12 தடவை உச்சரிக்கவும்.

• எனக்கு, வெள்ளியில் குழலூதும் கண்ணன் படம் பரிசாகக் கிடைத்தது. 'குழலூதும் கண்ணன் படத்தை வீட்டில் வைக்கலாகாது, கெடுதல்கள் வரும்' என்று சொல்லக் கேட்டு கவலைப்படுகிறேன். பெரியவர்கள் ஆசியுடன், விளக்கம் கூற வேண்டுகிறேன்.

நீங்கள் கவலையை நிறுத்திக் கொள்ளலாம். வீட்டில் குழலூதும் கண்ணன் படம் வைத்துக் கொள்வது தவறல்ல... கெடுதலும் வராது.

* குருவின் உபதேசம் இல்லாமல் ஒருவர் செய்யும் ஜப, தபங்கள் பலிக்காது என்று கேள்விப்படுகிறேன். பெரியவர்கள் விளக்கம் தர வேண்டுமே?

குரு உபதேசம் இல்லாமல் செய்யும் ஜபம், தவம் பலன் அளிக்காது. தங்களுக்குத் தகுந்த குரு கிடைக்காவிட்டால், ஆலயத்தில் தட்சணாமூர்த்தி சன்னதியில், தங்களுக்கு வேண்டிய ஜப தபங் களை எடுத்துக் கொள்ளலாம்.

* ஸ்ரீ பிள்ளையார் பூஜைக்கு வீட்டிலிருந்து துளசி எடுக்கலாமா? கூடாதா?

கேரளத்தில் பிள்ளையார் பூஜைக்கு துளசி எடுப்ப துண்டு.

* தமிழ் நாட்டில் ஒரு சில பூஜைக்கு மட்டும்தான் துளசி எடுக்கலாம் என்று கேள்விப்பட்டேன். எது சரி?

ஸ்ரீ வினாயகருக்குத் துளசி புஷ்பத்தால் பூஜை செய்யலாம்.

வீட்டுக்கு நான்தான் மூத்த மருமகள். திருமண மான வருடம் மாமியார் காலமானார். அடுத்த வருடம் நான் கருவுற்று இருந்தேன்.

ஆடி மாதத்தில் வரலக்ஷ்மி நோன்பு முதன் முதலில் எடுக்கக் கூடாது என்கிறார்கள். ஆவணியில் வரும் வரலக்ஷ்மி நோன்பில்தான் துவங்க வேண்டுமென்கிறார் கள். குருவிடமிருந்து உத்தரவு வேண்டும்?

முதன் முதலாக ஸ்ரீ வரலக்ஷ்மி நோன்பு விரதம், ஆவணி மாதத்தில் வரும்போதுதான் ஆரம்பிக்க

வேண்டும். வரும் ஆவணியில் எடுத்துக் கொள்ளவும்.

* நாங்கள் இப்போதுள்ள வீடு அம்மன் கோவிலாக இருந்ததாம். இப்போது வசிக்கும் வீட்டில் சாலிக்கிராமம் நாகர் வைத்த சிவலிங்கத்தைப் பூஜை செய்து வரலாமா? சந்தேகத்தைத் தீர்க்க வேண்டுகிறேன்?

சாலிக்கிராமத்துடன் சிவபூஜை செய்து வரலாம். எந்த சந்தேகமும் வேண்டாம்.!

* கர்ம வினைகளின் பலன்தான் ஒருவனுக்கு சுகமோ துன்பமோ ஏற்படுகிறது என்பது மறுக்க முடியாத உண்மை. (தவிர்க்க முடியாத ஒன்று பிராப்த கர்மம்)

ஏழைகளுக்குத்தான தர்மங்கள் செய்ய வேண்டும் என்பது முன்னோர் கூறியவை.

கர்ம பலனால்தான் வறுமையில் வாடுகிறேன் என்றால் அதைக் குறைக்க முற்படுவது எப்படிப் பொருந்தும்?

ஒரு மனிதனின் வாழ்க்கையில் வரக்கூடிய இன்ப துன்பம் பிராப்த கர்மாவாக இருந்தாலும் அந்த கர்ம பலனை மனிதனால் அழிக்க முடியாவிட்டால் அதனால் வரும் துன்பங்களைக் குறைக்கலாம்.

'ஊழையும் உட்பக்கம்' காணலாம்என்று வள்ளுவர் கூறுவது, மனித முயற்சியைத்தான். முயற்சி உள்ள இடத்தில், இறைவன் அருள் புரிவான் என்பதும் அறநூலின் முடிவாகும்.

* பூஜை செய்யும்போது, கற்பூர ஆரத்தி காட்டப் படும்போது, காற்றில் அணைந்துவிட்டால் அபசகுனம்

ஆகுமா? அப்படி அணையுமானால் என்ன நிவர்த்தி செய்வது?

கற்பூரம் அணைந்துபோனால் மறுபடியும் ஜோதி ஏற்றி வழிபட வேண்டும். இதுவே நிவர்த்தி.

* எனக்குத் தெரிந்த, வேண்டிய குடும்பம். தாயும் மகன்களும் மட்டுமே. அந்தத் தாய் விதவையாகி விட்டார்.

அவர் பூஜை அறையில் விளக்கேற்றலாமா?

விளக்கேற்றலாம்.

* கன்னிப் பெண்கள் ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் தினமும் செல்லலாமா? சனிக்கிழமை மட்டுத்தான் சொல்ல வேண்டுமா?

கன்னிப் பெண்கள் ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் சொல்லலாம். தினமும் அனைவரும் சொல்லலாம்

* மௌன விரதம் ஆண்கள் மேற்கொள்வது போல, பெண்களும் கன்னிப் பெண்களும் மேற்கொள்ள லாமா?

மௌன விரதத்தை ஆணும் பெண்ணும் அனை வரும் கடைப்பிடிக்கலாம்.

* காலில் குத்திய பிறகுதான் முள் என்றும், வழுக்கிய பிறகுதான் நிலமென்றும், உண்ட பிறகே நஞ்சென்றும், மகிழ்ச்சிதாம் முடிவில் சோகம் என்றும் புரிகிறது.

மனிதனுக்கு நடக்கப்போவது முன்பே தெரிந்தால் வாழ்வு எப்படி இருக்கும்?

எல்லாம் முன்பே தெரிந்துவிட்டால், உலக வாழ்க்கையில் மனிதனுக்கு ருசியே இருக்காது!

* ஆலயம் சென்று சாமி கும்பிட்டதும் கண்டிப்பாக அங்கு தரப்படும் திருநீறு இட்டுக் கொள்ளத்தான் வேண்டுமா?

இறைவனுடைய பிரசாதமாகக் கிடைக்கும் திருநீற்றை நெற்றியில் இட்டுக் கொள்வதே முறையாகும். எத்தனையோ ஆண்டுகளாக இருந்து வரும், பின்பற்றும் பக்திக் கொள்கை ஆகும்.

* புதிதாகக் கோயில் கட்டி கும்பாபிஷேகம் நடத்தும் பொழுது கர்ப்பக் கிருகத்தில் சுவாமி சிலைக்கு அடிபாகத்தில் நவரத்தினக் கற்களைப் போடுகிறார்கள். இதன் காரணம் என்ன?

தெய்வீக அருள் மேலும் பொங்குவதற்கும் தீய சக்திகள் தரிசிப்போரிடமிருந்து விலகட்டும் என்பதற்காகவே கர்ப்பக்கிருகச் சிலைக்குப் பதிக்கப்படுகிறது.

* வீட்டில் ஸ்ரீவிநாயகர் பூஜையை ஆண்கள்தான் செய்ய வேண்டும்; பெண்கள் செய்யக் கூடாது என்று சொல்கிறார்களே, காரணம் தெரிந்து கொள்ளலாமா?

ஸ்ரீவிநாயகப் பெருமானை ஆண் பெண் எல்லாரும் பூஜை செய்யலாம். தமிழ்ப் பாட்டி ஔவையார் பெரிய பிள்ளையார் பக்தை. சுந்தரமூர்த்தி சுவாமிகளும், சேரமான் பெருமாளும் கயிலாயத்துக்குப் போனார்கள். வழியில் ஔவையார் பிள்ளையார் பூஜைக்கு அமர்ந்து விட்டார்: பூஜையை முடித்துச் செல்லலாம் என்றார் ஔவையார். அவர்கள் முந்திச்சென்றுவிட்டார்கள் பிள்ளையார் பூஜை முடிந்ததும், ஔவையாரை துதிக்கையால் அவ்விருவருக்கும் முன்பே சேர்த்து விட்டார் என்பது புராண வரலாறு.

விநாயகர் அகவல் ஔவை பாடியதே.

* சில இரவுகளில் பயங்கர கெட்ட கனவுகள் வந்திருக்கின்றன. திருமணமாகி ஆறு வருடங்களுக்குப் பிறகு, என் கணவில், கணவர் இறந்து விட்டது போலவும், நான் விதவையான கோலத்தையும் கண்டேன். அந்தக் கனவுகள் கண்டபின் உடல் நடுங்குவதுண்டு.

இப்படிப்பட்ட துர்சொப்பனம் ஏற்படாமல் இருக்க பல வேண்டுதல்கள், பிரார்த்தனைகள் நிறைவேற்றி விட்டேன்.

தீராத என் மனக் கவலையை, தீய கனவு மறுபடி வராமல் இருக்க நான் என்னவிரதம் வேண்டுமானாலும் செய்யத் தயாராக உள்ளேன். ஜகத் குருவே எனக்கு வழிகாட்டுங்கள்?

நீங்கள் இரவு துயில் கொள்ளும் முன்பாக படுக்கையில் அமர்ந்து இந்தத் தோத்திரத்தைச் சொல்லி வரவும்.

''அச்யுதம் கேசவம் விஷ்ணும்
ஹரிம் சோமம் ஜனார்த்தனம்;
ஹம்ஸம் நாராயணம் க்ருஷ்ணம்
ஜபேத் துர்ஸ்வப்ன சாந்தயே''

* நான் தினசரி விநாயகர், முருகன், லக்ஷ்மி, சரஸ்வதி படங்களை வைத்து பூஜைசெய்து வருகிறேன். தெய்வப் படங்களுடன் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணர் மந்திரம் (வைத்து) பூஜையும் செய்யலாமா?

யாரேனும் ஒரு பெரியவர் மூலம் உபதேசம் பெற்று அவர்கள் மூலம் யந்திர பூஜை செய்யலாம். லக்ஷ்மி நாராயண பூஜை செய்யலாம், நல்ல பயன் கிட்டும்.

---




# அல்லயன்ஸ் வழங்கும்

## தெய்வீக நூல்கள்

[ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்க வேண்டியவை]

---

'வாகீச கலாநிதி' கி.வா.ஜ. வின்

பெரிய புராண
விளக்கம் I 26-25
" II 37-50
" III -[illegible]-00
" IV -35-00
" VxVI (அச்சில்)

வழிகாட்டி
(திருமுருகாற்றுப்படை
விளக்கம் 15-00

கந்த புராணக் கதைகள்
(அச்சில்)

பி. ஸ்ரீ.' அவர்களின்

மஹாபாரதக்
கதைகள் 32-50

உதய ஜோதி
(திருப்பரங்குன்றம்) 13-50

கருணைக் கடல்
(திருச்செந்தூர்) 13-50

வரம் தரு வள்ளல்
(பழனி) 13-50

ஒளிவளர் குருமலை
(சுவாமிமலை) 13-50

அருள் விளையாட்டு
(திருத்தனி) 13-50

பெருதற்கரிய பரிசு
(பழமுதிர் சோலை) 13-50

அருணகிரிநாதரின்
வாழ்க்கை வரலாறு 12-50

நவராத்திரியின்
கதைகள் 9-50

சித்திர ராமாயணம்
பகுதி I (அச்சில்)

எம். ராதாகிருஷ்ண பிள்ளையின்

தென்னாட்டுக்
கோயில்கள் I 12-00
do II 25-00

வடநாட்டுத் தலங்கள் (அச்சில்)

அருள் கொழிக்கும்
ஆலயங்கள் ( " )

அரம் காத்த அரண்கள் ( " )

பாகவதக் கதைகள் 12-00

சுகர் கூறிய கண்ணன்
கதை 12-00

பிற்கால வைணவம் 10-00

அவதாரமும் கம்பரும் 11-00

மற்றும்:

பால ராமாயணம் 10-00

பால பாரதம் 12-00

மங்கல வாழ்வுக்கு
மணியான யோசனைகள் 10-00

தெய்வத்தின் அருள்
வாக்கு 9-00

ராமாயண வினா
விடை (அச்சில்)

பாரத வினா விடை ( " )

நர்மதை
நதிக்கரையினிலே ( " )

---

5,00,000 பிரதிகளுக்கும் மேல் விற்பனையாகிய நூல்: மகன் தந்தை, தாய், சகோதரர், சகோதரி, குரு, மனைவி போன்ற பலருக்கும் செய்ய வேண்டிய கடமைகள், தரும விஷயம் முதலியவற்றையும் விளக்கும் ஒரு சிறந்த நூல்

## இந்துமத உபாக்கியானம்

விலை ரூ. 15—00